
SCHOOL TIME TABLE
MONDAY
TUESDAY
WEDNESDAY
THURSDAY
FRIDAY
SATURDAY
MY NAME:
MY BEST FRIEND:
CLASS:
ROLL No.:
CHAKRA GOLD




CHAKRA
GOLD

# அம்புலிமாமா



மதிமுகம் : 102 ஜூன் 2000 புன்னகை : 10

## பொருளடக்கம்



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai–600 026. Editor: Viswam

### சிறப்புப் படைப்பாக



வேதாளம் சொல்லும் கதை



கடவுளே காத்திரு



தங்க சிம்மாசனம்

கண்டுபிடியுங்கள், எழுதுங்கள், பரிசுகளை வெல்லுங்கள்.

அம்புலிமாமா





நீங்கள்

அயல்நாடுகளில்
உள்ள உங்கள்
உறவினர், நண்பர்களுக்கு



# அம்புலிமாமா

இதழை
அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

**அஸ்ஸாமி, வங்களாம், ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு**

அயல் நாட்டிலும் தாய்நாட்டில் உள்ள மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கட்டும்

**சந்தா விவரம்**

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.900.

இந்தியாவில் தரைவழித் தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.120.

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டியில் அல்லது மணியார்டரில் 'சந்தமாமா இந்தியா லிமிடெட்' என்ற பெயர் எழுதி அனுப்பவும்

முகவரி :
**பதிப்பகப் பிரிவு**
**சந்த மாமா இந்தியா லிமிடெட்**
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி, சென்னை - 600026.




ஆசிரியர்
**விஸ்வம்**



எல்லாக் கடிதப்
போக்குவரத்திற்கும்
சந்தமாமா
பத்திரிக்கைப் பிரிவு
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி,
சென்னை - 600026.
டெலி/ பேக்ஸ்
4841778/4842087
ஈமெயில் சந்தமாமா
@விஎஸ்என்எல்.காம்

**மும்பை அலுவலகம்**
2/Bநாஜ் பில்டிங்ஸ்
லாமிங்டன் ரோடு
மும்பை 400004
போன்:002-3887480
பேக்ஸ்:022-3889670


அமெரிக்காவில் தனிப் பிரதி 2 டாலர்கள் வருட சந்தா:20 டாலர்கள்
பணம் அனுப்ப வேண்டிய
முகவரி:


**இந்தியா அப்ராட்**
43, வெஸ்ட் 24வது தெரு
நியூயார்க், என்.ஒய்.10010
டெலிபோன் : (212)929-1727
பேக்ஸ் : (212) 627-9503



நிறுவனர் :
பி. நாகிரெட்டி
சக்கரபாணி

## விடுமுறைகளிடேயே

வருட முழுவதுமே விடுமுறையாகி விட்டால் விளையாட்டு கூட வேலை செய்வது போல ஒரே யடியாக வேண்டாததாகி விடும் என்றார் ஷேக்ஸ் பியர். நன்கு உழைத்து வேலை செய்பவர்களால் தான் விடுமுறையை இன்பமாய் அனுபவிக்க முடியும்.

பள்ளிகளில் கோடை விடுமுறை ஆரம்பமாகி விட்டது. நம் வேலையை எவ்வாறு செய்து வருகி றோம் என்பதை விடுமுறை உணர்த்தும். நாம் விரும் பும் வேலையைத்தான் நாம் செய்கிறோம். நம் வேலையை நாம் செய்வதே நம் பொறுப்பும் கடமையுமாகும்.

விடுமுறையை நாம் எவ்விதக்கட்டுப் பாடு மின்றி கழிக்கலாம். ஆனால் இந்த சுதந்திரம் எவ் வளவு எனப் புரிந்து செயல்பட வேண்டும். விடு முறையைத் திட்டமிட்டுக் கழிக்காவிட்டால் அது பற்றிப் பின் வருந்துவதில் பயனில்லை. விடுமுறை யில் நல்ல புத்தகங்களை எடுத்துப் படிக்கலாம். இதனால் வரலாற்றையும் நம் பண்பாட்டையும் அறிந்து கொள்ள முடியும். இவ்வாறு செயல்பட்டு நாம் வாழ்வில் உயர்வடைவோமாக.

# செய்திச் சுடர்

## ஷேக்ஸ்பியர் இத்தாலியரா?



சிசிலியின் பேராசிரியர் மார்ட்டி னோ லுவாராவின் கூற்றுப்படி ஷேக்ஸ்பியர் இத்தாலியில் பிறந்து தமது 24வது வயதில் லண்டனுக்கு இத்தாலியிலிருந்து சென்றவர் என்றாகிறது. அவரது பெயர் மைக்கேலாங்கிலோ என்பதாம். ஷேக்ஸ்பியரின் 37 நாடகங்களில் பதினைந்து இத்தாலியை நிலைகளமாகக் கொண்டுள்ளதை சான்றாக அவர் கூறுகிறார்

## புலி இனம் மறைகிறது!

பிரிட்டனின் சுற்றுப்புறச் சூழல் அமைச்சர் வேட்கைக்காரர்களால் புலிகள் கொல்லப்படுவதால் அந்த இனமே அழியும் அபாயம் உள்ளதெனக்



கூறுகிறார். சீனர்கள் மருந்திற்காகப் புலிகளைக் கொல்கிறார்கள். இந்தியர்களோ புலித்தோலுக்காகக் அவற்றைக் கொல்கிறார்கள்.

## ஐன்ஸ்ட்யினுக்கு சவால்



போர்த்துகீசிய இளம் விஞ்ஞானி ஜோவோமெகுசிஜோ ஒளியின் வேகம் ஐன்ஸ்ட்யின் கண்டுபிடிப்பு போலல்லாமல் மாறுபட்டு வருகிறது எனத்தன் ஆய்வால் நிரூபிக்க முயல்கிறார். இது விஞ்ஞானிகளின் முந்தைய நம்பிக்கையைத் தகர்த்து விடும்.

## கிரகங்கள் ஒன்று சேர்கின்றன

மே முதல் வாரத்தில் ஒரு அதிசய நிகழ்ச்சி நிகழ்ந்துள்ளது. சூரிய மண்டல கிரகங்களான சூரியன்,



சந்திரன், புதன், சுக்கிரன், செவ் வாய், வியாழன், சனி ஆகியவை ஒன்று சேர்ந்தன. இம்மாதிரி பதினைந்து நூற்றாண்டுகளுக்கு முன் கி.பி.529 மே மாதத்தில் நிகழ்ந்ததாம். இம் மாதிரி ஒன்று சேருவது நன்மையே பயக்கும் என்று கூறப்படுகிறது.

# அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

இந்திய சுதந்திரப் போராட்டத்தில் சுதந்திர உணர்ச்சியைத் தூக்கி விட்டது பக்கிம் சந்திரரின் 'வந்தே மாதரம்' என்ற பாடலே. இந்த 'வந்தே மாதரம்' என்ற இரு சொற்களைச் சொன்னதாலேயே சுதந்திரப் போரில் ஈடுபட்ட தேச பக்தர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் பட்ட துன்பங்களை சொல்லி முடியாது. இந்த இரு சொற்கள் தேச பக்தர்களுக்குத் தாரக மந்திரமாக இருந்தன.

இதை பக்கிம் சந்திரர் எழுதிய வேளை சுபவேளை. இதை அவர் தன் நாவல் 'ஆனந்தமடத்தில்' எழுதினார். இந்த நாவல் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சியை எதிர்த்து நடந்த கிளர்ச்சியை அடித்தளமாகக் கொண்டது. 'வந்தே மாதரம்' பாடல் இந்தியத் தாயென நாட்டை வர்ணித்து அதை வணங்குவதாக அமைந்துள்ளது. இந்த நாவலிலும் சரி, இதைப் பாடிக் கொண்டு சுதந்திரப் போராட்டத்திலும் குதித்த தேச பக்தர்கள் தன்னல மற்ற தியாகிகள்.

## பக்கிம் சந்திரர்



பக்கிம் சந்திரர் 1838 ஜூன் 28ல் வங்காளத்தில் பிறந்தார். கல்கத்தா பல்கலைக் கழகத்தின் முதலிரண்டு பட்டதாரிகளில் இவர் ஒருவர். இவர் ஒரு நீதிபதியாகப் பணி புரிந்து தம் திறமையை வெளிப்படுத்தியவர். இவர் நாட்டுப்பற்றுக்குத்தான் முதலிடம் அளித்தார்.

தற்கால வங்க இலக்கியத்திற்கும் புது மெருகு கொடுத்தவர் இவர். இவர் கவிஞர், நாவலாசிரியர், பத்திரிக்கையாளர், நல்ல கட்டுரையாளர் என மிகவும் புகழ் பெற்றவர். இவர் ஆங்கிலத்திலும் நன்கு எழுதும் திறன் படைத்தவர். இவர் 1894ல் இயற்கை எய்த போதிலும் இவரது புகழ் மறையாது இன்றும் நிலைத்துள்ளது.

# அம்புலிமாமா

## மே 2000




## விடைகள்

1. அரிச்சந்திரன், சந்திரமதி, காசியில்
2. அ) கிருஷ்ணர் விதர்ப்பநாட்டு இளவரசி ருக்மணியை மணந்து கொண்டார்

   ஆ) பலராமர் குசஸ்தலி இளவரசி ரேவதியை மணந்து கொண்டார்.

   இ) நளன் நிஷித நாட்டு மன்னன்

   ஈ) மார்க்கண்டேயர் புஷ்பவத்திரத்தீர்த்தக் கரையில் தவம் செய்தார்.

   உ) குகன் சிருங்கபேரிபுர மன்னன்
3. அ) இளங்கோ அடிகள் இயற்றிய சிலப்பதிகாரம்

   ஆ) பிருஹத்கதையை அளித்த குணாட்டியர்

   இ) மகாபாரதம் ஆரணிய பர்வம்

   ஈ) கம்பர், துளசிதாசர்.

   ) சார்வகர்

---

குறிப்பு: 1. இப் போட்டியில் யாரும் முழுமையாக சரியான விடைகளை அனுப்பவில்லை.

2. கதைகளைப்பற்றி சிலர் எழுதியது ஓரளவு ஒப்புக் கொள்ளக் கூடியதாக இருந்தாலும் திருப்திகரமாக இல்லை.

3. போட்டியில் கலந்து கொள்பவர்கள் கதைகளை ஆழ்ந்து படித்து விட்டுத் தங்கள் அபிப்பிராயங்களை எழுத வேண்டும்.

# ஆக்கபூர்வமான போட்டிகள்

## அம்புலிமாமா வாசகர்களுக்கு

உங்கள் அறிவுத் திறனைக் காட்ட பல்வேறு போட்டி களில் கலந்து கொள்ளுங்கள்





## போட்டோ வாக்கியப்போட்டி

1. ஒன்றுக்கொன்று ஏதாவது வகையில் தொடர்புள்ள இரு போட்டோக்களை இளம் போட்டோகாரர்கள், அத்தொடர்பு பற்றிய விளக்கத்துடன் எமக்கு அனுப்பலாம். தேர்ந்தெடுக் கப்படும் (இரு) போட்டோக்களுக்கு பரிசு ரூ.500/-

2. ஒரு பழமொழியைப் பிரசுரிக்கி



றோம். அதை விளக்கும் நிகழ்ச்சியை யோ, உங்கள் சொந்த அனுபவத்தை யோ அல்லது புதிய பழைய கதை களையோ 300 சொற்களுக்கு மேற் படாமல் எழுதி அனுப்புங்கள்.

இம்மாதப் பழமொழி:

**'கடன் பட்டார் நெஞ்சம் போல'**

தேர்ந்தெடுக்கப்பட்ட படைப்பிற்குப் பரிசு ரூ.500/-

உங்கள் படைப்பு ஏப்ரல் 30க்குள் எமக் குச் சேர வேண்டும். பரிசு பெற்ற படைப்பு ஜூன் மாத இதழில் பிரசுரிக் கப்படும்.

உங்கள் படைப்புகளை அனுப்ப வேண்டிய முகவரி : **அம்புலிமாமா ஆக்க பூர்வமான போட்டிகள்,**
சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி,
சென்னை - 600 026.

- ஆசிரியர்



வேதாளம் சொல்லும் கதை

## அற்புதப் பானம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்தப்பயங்கர ராத்திரியில் நீ இவ்வாறு சிரமப்படுவது கண்டு நான் பரிதாபப்படுகிறேன். பொதுவாக மன்னர்கள் எந்த நிலையையும் அறிய ஒற்றர்களைக் கொண்டு தெரிந்து கொள்வது வழக்கம். ஆனால் இப்படிச் செய்யாத குமாரசேனன் என்ற



மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

வெகு காலத்திற்குமுன் குந்தள நாட்டைக் குமாரசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்கு அதிசயப் பொருள்களைச் சேகரிப்பதில் ஆர்வம் அதிகம். அதிசயப் பொருள்களைக் கொண்டு வந்து கொடுப்பவர்களுக்கு அவன் பரிசுகளைக் கொடுத்து வந்தான். அதனால் பல நாடுகளிலிருந்து பலர் வந்து அதிசயப் பொருள்களைக் கொடுத்து தங்க நாணயங்களைப் பரிசுகளாகப் பெற்றுச் சென்றனர்.

ஒரு முறை குமாரசேனன் தர்பார் முடிந்த பின் அமர்ந்திருக்கையில் ஒருவன் வந்து அவனை வணங்கி ''அரசே! நான் பூதங்களுக்கு குருவான காலகேதுவின் முக்கிய சீடன். நீண்டகாலம் அவருக்குப் பணி புரிந்து அற்புதப்பானம் ஒன்றைத் தயாரிக்கும் முறையை அவரிடமிருந்து கற்றேன். என் பெயர் வக்கிரகேது'' என்றான். அவனது கையில் கூஜா போன்ற பாத்திரம் ஒன்று இருந்தது அவனைப் பார்த்தாலே சிரிப்பு வரும் போலிருந்தது. மொட்டைத் தலை. ஒளியற்ற கண்கள். குறுந்தாடி. குமாரசேனன் அவனைக் கண்டு ஆச்சரியப்பட்டவாறே ''அந்தக் கூஜாவில்தான் நீ கூறிய அற்புதப் பானம் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

வக்கிரகேதுவும் ''ஆம் இதில் நான் கூறிய அற்புதப்பானம் தான் உள்ளது. ஒவ்வொரு மனிதனுள்ளும் இன்னொரு மனிதன் நம் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்து கொண்டிருக்கிறான். இந்த அற்புதப் பானத்தைப் பருகினால் மறைந்திருக்கும் மனிதனைக் கண்டுபிடித்துவிடலாம்'' என்றான். மன்னனும் ''ஒரு மனிதனுக்குள் இன்னொரு மனிதன் இருக்கிறானா? அது எப்படி?'' எனவே வக்கிரகேதுவும் உங்கள் முன் உங்களுக்கு விசுவாசமுள்ளவர்கள் போல நடித்து உங்களை வெறுப்பவர்கள் எவ்வளவோ பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இந்தப் பானத்தைப் பருகினால் அவர்களது உண்மைசொரூபம் வெளிப்பட்டு விடும். வேண்டுமானால் அதோ

நிற்கும் காவலாளிக்கு இந்த பானத்தைக் கொடுத்துப் பருக வைத்துப் பாருங்கள்'' என்றான்.

மன்னனும் அந்தக் காவலாளியை அழைத்து வக்கிரகேதுவிடமிருந்து அற்புதப் பானத்தை வாங்கிக் குடிக்கும்படிச் சொன்னான். காவலாளியும் அந்தப் பானத்தை வாங்கிப் பருகினான். ஓரிரு நிமிடங்களுக்குப் பிறகு அவன் ஆவேசம் கொண்டு சாமி ஆடுபவன் போல ஆடி சற்று தூரத்திலிருந்த காவலாளிகளின் தலைவனைப் பார்த்து ''அடே! பலவீரா! அன்று நான்கு பேர்களுக்கு முன்னால் என் கன்னத்தில் அறைந்து அவமானப் படுத்தினாயே. அதற்கு இது தான் பதில்'' என்று கூவித் தன் கையிலிருந்த ஈட்டியை அவனுக்குக் குறி வைத்து எறிந்தான்.

பலவீரன் சட்டென ஒதுங்கி விடவே ஈட்டித்தாக்குதலிலிருந்து தப்பினான். இந்நிகழ்ச்சியைக் கண்ட சபையோர் திகைத்தனர். மன்னனும் பலவீரனிடம் அதற்கான காரணத்தைக் கேட்கவே அவனும் ''அரசே! இந்தக்காவலாளி முறை தவறி நடந்ததற்காகத்தான் நான் அவனை அறைந்தேன்'' என்றான். அது என்றோ நடந்த விஷயம்! ஆனால் அந்தக் காவலாளி அதை மனதில் வைத்துக் கொண்டு இது நாள் வரை தன் தலைவனுக்குக் கீழ் படிந்து நடப்பது போல நடித்திருக் கிறான்!

மன்னன் அக்காவலாளியைச் சிறையில் அடைக்கக் கட்டளை



இட்டு விட்டு ''ஆகா! இந்தப்பானம் மிகவும் அற்புதமானதே. இது வரை இது போன்றதை நான் கண்டதே இல்லை'' எனக்கூறி. வக்கிரகேது வைப் பாராட்டி அவன் தங்குவதற் கான ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தான். அன்றிரவு பலவீரன் மன்னனைத் தனிமையில் சந்தித்து ''அரசே!அந்தக் காவலாளியும் வக்கிரகேதுவும் கூடிப் பேசி அது அற்புதப் பானம் என்று நிரூபிக்க நாடக மாடுகிறார்களோ என்று நான் நினைக்கிறேன். அந்தப்பானத்தில் கொஞ்சம் வாங்கி என்னிடம் கொடுங்கள். நான் பரீட்சித்துப் பார்க்கிறேன்'' என்றான்.

மன்னனும் வக்கிரகேதுவிட மிருந்து ஒரு கிண்ணத்தில் அந்த அற்புதப்பானத்தில் கொஞ்சம்



வாங்கி பலவீரனிடம் கொடுத்தான். அதனை வாங்கிக் கொண்டு அவன் அவ்வூரின் கோவிலுக்குப் போய் அங்கு அமர்ந்து ஜெபம் செய்து கொண்டிருந்த பக்தரை அணுகி ''சுவாமி! நான் காசியிலிருந்து புனிதகங்கை நீரைக் கொண்டு வந்திருக்கிறேன். தாங்கள் பருக வேண்டும்'' எனக்கூறித் தான் கொண்டு வந்த அற்புதப் பானத்தை அவரிடப் கொடுத்தான்.

பக்தரும் அவனை ஆசீர்வதித்து விட்டு அவன் கொடுத்த பானத்தை மடக் மடக் கென்று குடித்தார். சற்று நேரத்திற்குப்பின் அவரும் ஆவேசமாய் ஆவிபிடித்தவர் போல ஆடி ''சாம்பா! சாம்பா! எனக் கூறியவாறே தன்கையிலிருந்த தடியால் பலவீரனை அடித்துக் கொண்டே இருந்தார். அவனும் தன் நினைவுஇழந்து விழுந்து விட்டான் அவ்வளவு தான் ! அடுத்த வினாடியே அந்த பக்தர் பலவீரன் அணிந்திருந்த தங்கச்சங்கிலி, தங்கமோதிரம், தங்கத்தோடா, பதக்கம் முதலியவற்றைக்கழற்றி எடுத்துக் கொண்டு ஓடலானார். ஆனால் அச்சமயம் அவ்வாறு அவர் செய்ததைப் பார்த்த அரசாங்க வீரர்கள் அவரைப்பிடித்து சிறையில் அடைத்தார்கள். பலவீரனை அவனது வீட்டில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

மறு நாள் மன்னன் ராணியுடன் பேசிக்கொண்டிருக்கையில் திடீரென பலமாகச்சிரிக்கவே ராணியும் ஆச்சரியப்பட்டு ''ஏன் இப்படிச்சிரித்தீர்கள்?'' என்று கேட்டாள். மன்னனும் ''நம் பலவீரன் நேற்று ஒரு பக்தரிடம் அடி வாங்கியதை நினைக்கவே சிரிப்பு வந்தது'' எனக் கூறி பலவீரன் அற்புதப்பானத்தைப் பரீட்சிக்கப் போய் அவன் பட்ட அவஸ்தையை விவரமாகக்கூறினான்.

அதைக்கேட்ட ராணி ''ஓ! அதிசயமாய் இருக்கிறதே. அந்தப்பானம் அவ்வளவு அற்புதமானதா?'' என்று கேட்க, மன்னனும் ''ஆம். அற்புதமானதே. எனவே அப்பானத்தைப் பெரிய அளவில் தயாரிக்க பத்து லட்சம் தங்க நாணயத் திட்டம் ஒன்றைத் தயாரிக்கப் போகிறேன்'' என்றான். அப்போது ராணி ''அரசே!

அந்தப்பானம் நல்லது என்று எனக்குத் தோன்றவில்லை. அதைக் கொஞ்சம் என்னிடம் கொடுத்தால் நான் பரீட்சித்து விட்டு என் அபிப்பிராயத்தைக் கூறுகிறான்'' என்றாள்.

மன்னனும் ''ஓ! உன்னையும் பல வீரனின் வியாதி தொத்திக் கொண்டதா? பேஷ். உனக்கும் அந்தப் பானத்தை வரவழைத்துக் கொடுக்கிறேன். அப்புறம் உன் கதி என்ன ஆகுமோ?'' என்று கூறினான். மன்னனும் அற்புதப் பானத்தில் கொஞ்சம் வரவழைத்து ராணியிடம் கொடுக்கவே அதை எடுத்துக் கொண்டு தன் அந்தப் புரத்திற்கு ராணி சென்றாள். அங்கு அவள் .அதைத்தன் தலைமைப் பணிப்பெண்ணான மல்லிகாவிடம் கொடுத்து குடிக்கச்சொன்னாள். மல்லிகா அதைக் குடித்ததும் நேராக அவள் சமையலறைக்குப் போய் சமையல்காரனிடம் ''இதோ பார்! இந்த ராணியின் தொல்லையை என்னால் சகிக்கமுடியவில்லை. நம் நாட்டிலே கிடைக்காத காஷ்மீரக் குங்குமப்பூவை எப்படியாவது நான் கொண்டு வாவேண்டுமாம். இந்தத் தொல்லைக்கு ஒரேயடியாக முடிவு கட்டுகிறேன். இந்த விஷத்தை ராணியின் சாப்பாட்டில் கலந்து விடு'' என்று கூறிப்போனாள்.

இந்த விஷயத்தை சமையல் காரன் ராணியிடம் கூற அவள் மிகவும் ஆச்சரியப்பட்டாள்.




அன்றிரவு மன்னன் அவளைக்கண்டு ''என்ன? உன் பரீட்சை முடிந்ததா? அந்தப்பானம் சக்தி வாய்ந்தது தானே'' கேட்டான். ராணியும் தன் பணிப்பெண் மல்லிகாவின் செயல் பற்றிக் கூறி ''அரசே! ஒரு முறை நாம் இருவரும் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்த போது ஒரு தாழம்பூவைப் பறிக்கச் சென்றேன். அப்போது என்னை ஒரு பாம்பு தீண்டவரவே, எங்கிருந்தோ மல்லிகா ஓடி வந்து அந்தப் பாம்பைப்பிடித்துத் தூக்கி எறிந்து கொன்றாள். அந்த மல்லிகாவா என்னைக் கொல்ல விஷம் கலக்கச் சொன்னாள்?'' என்று வியப்புடன் கூறினாள்.

இதைக் கேட்ட குமாரசேனன்

ஆழ்ந்து யோசிக்கலானான். பிறகு சட்டென எழுந்து போய் காவல் வீரர்களிடம் ''நம் விருந்தினர் விடுதியில் தங்கியுள்ள வக்கிரகேது வைப் பிடித்து இழுத்துப் போய் ஈட்டிகள் பதிக்கப்பட்டுள்ள கிணற்றில் தள்ளுங்கள்'' என்று கட்டளை இட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! குமாரசேனன் வக்கிரகேதுவுக்கு மரண தண்டனை விதித்தது சரியா? அவன் தயாரித்த பானம் அற்புத சக்தி வாய்ந்தது என்பதை மன்னனே பலமுறை கண்டானே. இதனால் அவன் தனக்கு விசுவாசமாக யார் யார் உள்ளார்கள் என எளிதாக அறிந்து கொள்ளலாமே. இந்த அரிய வாய்ப்பை அவன் ஏன் நழுவ விட்டான்? இக்கேள்விகளுக்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''வக்கிரகேது கொண்டு வந்த அற்புதப் பானத்தால் மனிதர்களுள் மறைந்துள்ள கெட்ட குணங்கள் மட்டுமே வெளிப் பட்டன. அவர்களது நற்குணங் களில் ஒன்று கூட வெளிப்பட வில்லை. அந்தப்பானத்திற்கு ஒரு மனிதனிடம் பல நல்ல குணங்கள் இருந்தாலும் அவனிடமுள்ள ஓரிரண்டு கெட்ட குணங்களைக் காட்டும் சக்தி மட்டுமே உள்ளது. எனவே அதை அருந்துபவர்கள் எல்லோரும் கெட்டவர்களாகவே காட்டப்படுவார்கள். இது அநியாயம். இதற்கு துணை போகக் கூடாது என்று எண்ணியே குமார சேனன் வக்கிரகேதுவிற்கு மரண தண்டனை விதித்தான். இது முற்றிலும் சரியே'' என்று பதில் கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறியது.



# அரை ரூபாய் பரிசு!

கண்ணப்பன் தன் ஊரிலிருந்து பட்டணத்திற்கு வியாபாரவிஷயமாகச் சென்றான். தன் வேலையை முடித்துக்கொண்டு ஒரு உணவு விடுதிக்குச்சென்றபோது தன் ஊர் தங்கராசுவைக் கண்டான். அவனோடு பேசியதில் அவனும் தன் வேலையை முடித்து விட்டானென்றும் உணவு உண்டபின் ஊர்திரும்பப் போகிறான் என்றும் கண்ணப்பன் அறிந்து கொண்டான்.

இருவரும் சாப்பிட்ட பின் தம் ஊருக்குச்செல்ல உணவு விடுதியிலிருந்து வெளியே வந்தார்கள். அப்போது அந்த உணவு விடுதியின் வேலையாள் ஓடோடி வந்து ஒரு சரிகை அங்கவஸ்திரத்தை கண்ணப்பனிடம் கொடுத்து ''ஐயா! தாங்கள் தங்களுடைய இந்த சரிகை அங்கவஸ்திரத்தை சாப்பிட்ட இடத்திலேயே விட்டுவிட்டு வந்து விட்டீர்களே'' என்றான். கண்ணப்பனும் அதை வாங்கித்தன் தோளில் போட்டுக்கொண்டு அந்த வேளையாளுக்கு அரைரூபாய் பரிசாகக் கொடுக்க அவனும் கண்ணப்பனுக்கு வணக்கம் செலுத்திவிட்டு அதைவாங்கிக் கொண்டு சென்றுவிட்டான்.

அதைக்கண்ட தங்கராசு '' மறந்து விட்டு வந்த அங்கவஸ்திரத்தைக் கொண்டு வந்து கொடுத்ததற்கு அரை ரூபாய் ஏன் கொடுத்தாய்? கால் ரூபாய் கொடுத்தால் போதுமே'' என்றான். கண்ணப்பன் அங்கவஸ்திரத்தை ஒரு முறை இழுத்து நேராகப்போட்டுக் கொண்டு அரை ரூபாய்க்கு கிடைத்த இந்த சரிகை அங்கவஸ்திரம் எனக்கு லாபம் தானே '' என்று சிரித்துக்கொண்டே கூறினான்.

தங்கராசுவும் '' அடபாவி! இதுவா விஷயம்!'' எனக் கூவி ஆச்சரியப்பட்டான்.'






# நாய் காப்பாற்றியது!

ஜெயபுர ஜமீன்தாரர் தம் குதிரை மீதமர்ந்து ஒரு நாள் மாலை ஊருக்கு வெளியில் செல்லும் ஒரு பாதையில் சென்று கொண்டிருந்தார். அப்போது ஒரு புதரருகே ஒரு நாய் படுத்திருந்து அப்போதே அது ஈன்ற நான்கு குட்டிகளுக்குப் பால் கொடுத்துக் கொண்டிருந்தது. அச்சமயம் வேகமாக வந்த ஒரு இரட்டை மாட்டு வண்டி அப்புதரின் பக்கம் போய் பெண் நாயையும் அதன் மூன்று குட்டிகளையும் நசுக்கிக் கொன்று விட்டது.

வீல் வீலென்று கத்திக்கதறும் நாய்க்குட்டியைப் பார்த்த ஜமீன்தாரர் தம் குதிரை மீதிருந்து கீழே இறங்கி வண்டிக்காரனைக் கடிந்தவாறே உயிர் தப்பிய நாய்க் குட்டியை எடுத்துக் கொண்டார். அதன்பின் அதனோடு தம் குதிரை மீது அமர்ந்து அவர் தம் மாளிகைக்குச் சென்றார். அங்குள்ளவர்களிடம் அந்த நாய்க்குட்டியைத் தான் காப்பாற்றியது பற்றிக் கூறவே அவருடைய புரோகிதரும் சோதிடருமான பஞ்சு சாஸ்திரி ''ஐயா! இந்த நாயின் வலது கண்ணின் மேல் இரு புள்ளிகளும் இடது கண்ணின் கீழில் இரு கோடுகளும் உள்ளதால் இதனை வைத்துப் பாதுகாப்பவருக்குக் கெடுதல்களே விளையும். எனவே இதனைக் கொன்று விடுங்கள்'' என்றார்.

ஜமீன்தாரரோ ''நான் என் ஜமீனில் யாருமே ஜீவஹிம்சை செய்யக் கூடாது என்றும் தெய்வ வழிபாடு என்ற பெயரில் ஆடு,

— சிவனார் செல்வன்

கோழி போன்ற உயிரினங்களை பலியிடக் கூடாது என்றும் கட்டளை இட்டிருக்கிறேன். எனவே உங்கள் பேச்சைக் கேளாமல் இந்த நாய்க் குட்டியை நான் வளர்க்கத்தான் போகிறேன். இதனால் தெய்வம் எனக்கு எந்தக் கெடுதலையும் செய்யாது'' என்று முகத்தில் அறைந்தது போலக் கூறினார். தன் சொல்லிற்கு மதிப்பில்லாமல் போயிற்றே எனப் பஞ்சு சாஸ்திரி கோபமும் ஆத்திரமும் கொண்டார். தன் கோபத்தை ஜமீன்தாரர் மீது காட்ட முடியாததால் அந்த நாய்க் குட்டியின் மீது தம் வெறுப்பைக் காட்டலானார்.




ஜமீன்தாரர் அந்த நாய்க்குட்டிக்கு நல்ல உணவு கொடுத்து வளர்க்கவே அது பெரிய நாயாகி ஜமீன்தாரரின் பக்கத்திலேயே எப்போதும் இருக்கலாயிற்று. அவருக்கு வேண்டியவர்களையும் அது சுற்றிச்சுற்றி வரலாயிற்று. ஜமீன்தாரர் வளர்த்து வரும் நாய் என்ற காரணத்தால் அதனை அவர்கள் விரட்டாமல் இருந்தார்கள். அந்த நாய் பஞ்சு சாஸ்திரியையும் சுற்றி வரும். அப்போது அவர் முகத்தைச் சுளித்து தம் வெறுப்பைக் காட்டுவார். ஆனாலும் அந்த நாய் சில சமயங்களில் அவரது வீட்டிற்குக் கூடப் போய் வந்தது. அக் குடும்பத்தவரும் அதனை விரட்டாமல் இடம் கொடுத்தே வந்தார்கள்.

ஒரு நாளிரவு அந்த நாய் பஞ்சு சாஸ்திரியின் வீட்டிலேயே படுத்து விட்டது. சாஸ்திரிக்கு எரிச்சலாக இருந்த போதிலும் அதை வெளிக்காட்ட முடியாமல் படுத்துத் தூங்கினார். விடியும் வேளையில் நாய் பலமாகக் குரைக்கவே இதென்ன தொல்லை என்று கூறி எழுந்து ஒரு தடியை எடுத்துக் கொண்டு அதனை அடிக்கப் போனார். அப்போது சன்னலருகே 'புஸ்' ஸென்று சத்தம் கேட்கவே அவர் அங்கு பார்த்து விட்டு ''ஐயோ பாம்பு'' என்று உரக்கக் கூவினார். உடனே வீட்டிலுள்ள மற்றவர்கள் எழுந்தோடி வந்து அந்தப் பாம்பை அடித்துக் கொன்றார்கள்.

அந்தப் பாம்பு அங்கு வரக் காரணம் சாஸ்திரி ஜமீன்தாரரின்



''அறமாகிய செயல் ஒரு உயிரைக் கொல்லாமை யாகும். கொல்லுதல் அறமல்லாத செயல்கள் எல்லாவற்றையும் விளைவிக்கும்''

– திருக்குறள்

தர்பாரில் பெருமை அடித்துக் கொண்டது தான். ஒரு நாள் அவர் அதிகாலையில் ஆற்றிற்கு குளிக்கப் போகையில் வழியில் ஒரு நல்ல பாம்பு ஊர்ந்து செல்வதைக் கண்டு வேண்டுமென்றே அதைத்தன் காலால் மிதித்தார். அப்போது அப்பாம்பு புதருக்குள் ஓடி மறைந்தது. இந்த நிகழ்ச்சியை சபையில் கூறி அவர் ''பாம்பு பகையை மறக்காது. என்றாவது பழி வாங்க வரும். ஆனால் அதனால் என்னை ஒன்றும் செய்ய முடியாது. அதை என் மந்திர சக்தியால் கட்டிப் போட்டு விடுவேன்'' என்று வீராப்புடன் சொன்னார். அதை ஜமீன்தாரரின் நாயும் கேட்டுக் கொண்டிருந்தது. அன்று முதல் சாஸ்திரியைப் பாதுகாக்க அது அவரைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது.

ஜமீன்தாரரின் நாய் அந்தப் பாம்பை சன்னலருகே பார்த்ததும் குரைத்துத் தன்னை எழுப்பி உயிரைக்காத்தது என்பதை பஞ்சு சாஸ்திரி புரிந்து கொண்டார். அவர் அந்த நாயைப் பிரியமாகத் தடவியவாறே'' இவ்வளவு நாட்களாக உன்னை நான் வெறுத்து வந்தேன். அப்படியிருந்தும் நீ என்னிடம் அன்பு காட்டி இன்று என்னையே காப்பாற்றினாய். உன்னைக் கொல்ல நினைத்தேன். நீயோ எனக்கு பகைவனுக்கருள் வாய் நல் நெஞ்சே! என்று அறிவுரை கூறியுள்ளாய். ஜீவஹிம்சைகூடாது என்பது எனக்கு இப்போது நன்கு புரிந்தது''என்று கூறிக் கண்ணீர் உகுத்தார்!






6

*(கௌண்டனிய நாட்டு இளவரசன் விஜயதத்தன் ஸ்ரீலேகாவை மணந்து கொண்டான். ராஜகுருவின் கட்டளைப்படி நகரில் ஓரிடத்தில் தோண்டவே அங்கு ஒரு தங்க சிம்மாசனம் கிடைத்தது. அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய ஏற்பாடுகள் செய்யப் பட்டு அந்த சிம்மாசனம் வைக்கப்பட்டது. அவன் முதல் படியில் கால் வைத்தபோது அதன் வலது புறமிருந்த பதுமை அவனைத் தடுத்து தான் கூறும் காலகேது மன்னனின் கதையைக் கேட்டு விட்டுத் தான் கேட்கும் கேள்விகளுக்கு சரியான பதில்களைக் கூறிய பிறகே அடுத்த படியில் கால் வைக்க வேண்டும் எனச் சொல்லி கதை சொல்லலாயிற்று. அதன் பிறகு -)*

ஒரு வெள்ளிக்கிழமையன்று பட்டத்து ராணி ஹைமவதி சித்திரரதஸ்வாமி கோவிலுக்குச் சென்றாள். அவள் தன் வழி பாட்டை முடித்துக் கொண்டு திரும்புகையில் அவளை மண்டபத்தில் அமர்ந்திருந்த சன்னியாசி ஒருவர் உற்றுப் பார்த்தார். அதே சமயம் அவரைப் பார்த்த ராணியும் பயபக்தியுடன் கை கூப்பி வணங்கினாள். சன்னியாசியும் புன்னகை புரிந்து அவளை ஆசீர்வதித்தார். அவர் பூவோடு சேர்ந்த நாரும் மணக்கும் எனக் கவிதை கூறியது கேட்டு ராணி ஆச்சரியப்பட்டாலும் மீண்டும் பணிவுடன் அவரை வணங்கி விட்டு அங்கிருந்து சென்றாள்.

அன்று மாலை காலகேதுவிற்கு இந்த விஷயம் தெரிந்து விட்டது. அவ்வளவுதான். கடுங்கோபம் கொண்டு அவன் ராணிக்கு ஒரு மாத சிறை தண்டனை விதித்தான். ராணிக்குக் கவிதை கூறிய சன்னியாசியைத் தேடிப்பிடித்து இழுத்து வரும்படி தன் வீரர்களுக்கு



கடிதத்தில் இப்படி எழுதப்பட்டி ருந்தது: எங்கள் நாட்டில் மனிதாபி மானமே இல்லை. யார் யாரை வேண்டுமானாலும் அடிக்கலாம். அதை மற்றவர்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டே நிற்கிறார்கள். பிறருக்கு உதவ வேண்டும் என்ற எண்ணமே யாரிடமும் இல்லை. ஒரு முகமூடித் திருடன் மட்டும் மக்களுக்கு நல்ல வேலைகள் செய்து உதவுகிறான் என்றாலும் அவன் திசை தவறி போய் விட்டான். நானோ கிழவனாகி விட்டேன். என்னால் எதுவும் செய்ய முடியா மல் தவிக்கிறேன். எம் நாட்டைக் காக்க நீதான் வரவேண்டுமென நான் வேண்டிக் கொள்கிறேன்.

அவன் கட்டளை இட்டான். வீரர்கள் அவரைக் கண்டுபிடித்து இழுத்து வந்து மன்னன் முன் நிறுத்தினார்கள். காலகேது அவரை சுட்டுப் பொசுக்கும் வெயிலில் நிறுத்தித் தன் கையாலேயே சவுக்கால் நூறு அடிகள் அடித்தான். சன்னியாசி அடி தாங்க முடியாமல் தன் நினைவை இழந்து கீழே விழுந்தார்.

இந்தக் கொடூரத்தைக் கண்ட தேச பக்தனும் முன்நாள் சேனாதிபதியு மான ஸ்ரீமல்லனின் உள்ளம் கொதித்தது. இந்த நிலையை மேலும் வளரவிடக் கூடாது என எண்ணி அவன் அண்டை நாட்டு மன்னன் சந்தன வர்மனுக்கு ஒரு கடிதம் எழுதித் தன் கிளியின் வாயிலாக அனுப்பினான். அக்

சந்தனவர்மனும் அக்கடிதம் கிடைப்பதற்கு முன்னரே திரிபுராந்தக நாட்டின் நிலை பற்றி அறிந்திருந்தான். எனவே தன் படைகளோடு வந்து காலகேதுவை அவன் மிக எளிதில் தோற்கடித் தான். காலகேதுவையும் அவனது ராணிகளையும் ஒருவனத்தில் வசிக்க வைத்துக் கடுமையாக உழைத்து வேலை செய்ய வைத்தான். இதற்குப் பின் முகமூடித் திருடன் சித்திரரதனைப் பிடித்துக் கொண்டுவரும்படி சந்தனவர்மன் கட்டளையிட்டான்.

வீரர்கள் எல்லா இடங்களிலும் தேடியும் சித்திரரதன் அகப்படவே இல்லை. அவனைப் பற்றிய விவரங்களை விசாரித்தபோதும்

யாராலும் எதுவும் கூற முடிய வில்லை. அப்போது ஸ்ரீமல்லன் சந்தனவர்மனிடம் ''நீங்கள் படை எடுத்து வருமுன்பே சித்திரரதன் ஏதோ நோய்வாய்ப்பட்டு படுத்துக் கிடப்பதாகக் கேள்விப்பட்டேன். இவ்வளவு நாட்களாக அவனை எங்கோ மறைத்து வைத்திருக்கிறார்கள் என்றே நான் நினைக்கிறேன்'' என்றான்.

அதைக் கேட்டதும் சந்தன வர்மன் வைத்தியர்களைக் கண் காணிக்கும்படித் தன் ஒற்றர் களுக்குக் கட்டளை இட்டான். அப்போது அசுவமுகன் என்ற வைத்தியன் யாரோ ஒருவனுக்கு ரகசியமாகச் சிகித்சை செய்கிறான் என்பது தெரிந்தது. அதனால் அவனை அழைத்து வரச் சொன்னான். அசுவமுகன் வந்ததும் சந்தனவர்மன் அவனிடம் கேள்விகள் கேட்டுத் துளைக்க லானான். அவனோ தான் யாருக்கும் ரகசியமாக சிகித்சை அளிக்க வில்லை என்றும் தனக்கு சித்திரரதனைப் பற்றி எதுவுமே தெரியாது என்றும் கூறினான். அவன் கூறியது உண்மையல்ல என்று தெரிந்தபோதிலும் சந்தனவர்மனால் எதுவும் செய்ய முடியவில்லை.

மறுநாள் சித்திரநேமி என்ற அதிகாரி சந்தனவர்மனைத் தனிமையில் கண்டு ''அரசே! நேற்றிரவு அசுவமுகன் தனியாகப்



பூனைபோலப் பதுங்கிப் பதுங்கிச் செல்வதைக் கண்டு நான் அவனைப் பின்தொடர்ந்து போய் சித்திரரதனைப் பற்றிய சில விவரங்களை அறிந்தேன்'' என்றான். சந்தனவர்மனும் அவன் சொன்னவற்றை கவனமாகக் கேட்டுவிட்டு அவனோடு அவன் காட்டிய இடத்திற்குச் சென்று சித்திரரதனை அவனே பிடித்து விட்டான்.

அதன் பிறகு சித்திரரதனுக்குச் சிகித்சை அளிக்க சந்தனவர்மன் அரசாங்க வைத்தியரை நியமித் தான். சித்திரரதனின் உடல் நலம் பெற்றதும் சந்தனவர்மன் அவனை திரிபுராந்தக நாட்டின் சிற்றரசனாக்கி ஆட்சி புரிந்து வரும்படிக்

கூறினான். அதன் பிறகு சித்திரதனைக் காட்டிக் கொடுத்த சித்திரநேமியைக் கடுமையாக தண்டித்து "இனி நாட்டில் லஞ்சத்திற்கும் துரோகச் செயல்களுக்கும் இடமளிக்கக் கூடாது. அப்படி யாராவது செய்தால் சித்திரநேமிக்குக் கிடைத்த தண்டனை தான் கிடைக்கும்" என எச்சரித்தான். பிறகு அவன் "நான் சித்திரரதனை இப்போது சிற்றரசனாக நியமித்தாலும் அவன் கடந்த காலத்தில் செய்த சட்ட விரோதமான செயல்களுக்காக தண்டனையிலிருந்த தப்பிவிட முடியாது. எனவே அவன் ஒவ்வொரு பௌர்ணமியன்றும் சித்திரரதஸ்வாமி கோவிலைத் துடப்பம் கொண்டு பெருக்கி சுத்தம் செய்ய வேண்டும். இதுதான் அதற்கு ஏற்ற தண்டனை" என்றான்.

பதுமை இக்கதையை விஜயதத்தனுக்குக் கூறி "மன்னனே! சித்திரரதன் பற்றிய உண்மையைச் சித்திரநேமி ஒருவன்தானே கூறினான். மற்றவர்கள் எல்லோரும் சித்திரரதனைப் பற்றிய உண்மையைக் கூறவில்லை. இதை அறிந்தும் சந்தனவர்மன் அவர்களைக் கடிந்து கொள்ளவே இல்லை. ஆனால் அவன் சித்திரநேமியை தண்டித்து அவன் ஊழல் புரிந்தவனெனக் கூறினான். முகமூடித்திருடனான சித்திரரதனுக்கு அற்பதண்டனை அளித்து நாட்டின் மன்னனாக்கினான். நீ சந்தனவர்மனின்



நிலையில் இருந்தால் என்ன செய்வாய்? இதற்கு விளக்கமான விடை கூறினாலே நீ அடுத்த படியில் அடி எடுத்து வைக்க முடியும். சரியான விளக்கம் கொடுக்காவிட்டால் அடுத்த கணமே இந்த சிம்மாசனம் மாயமாய் மறைந்து விடும்'' என்றது.

அப்போது விஜயதத்தன்''சத்திய சக்தியே! சந்தனவர்மன் அளித்த தீர்ப்புகள் முற்றிலும் சரியே. சித்திரரதன் காலகேது மன்னனின் ஆட்சியில் துன்பங்களை அனுபவித்த மக்களுக்கு உதவினான். அதனால் மக்களின் அன்பிற்கு அவன் பாத்திரமானான். இதற்காக அவன் கடை பிடித்த வழிமுறைகள் சரியானவை அல்ல என்றாலும் மக்களின் பசியைப் போக்க உடனடியாக ஏதாவது செய்து தானே ஆக வேண்டும்? சித்திரரதன் அதைத்தான் செய்தான். அவன் கொள்ளை அடித்தது தம் நலனுக்கே என மக்கள் எண்ணி அவனை நேசித்தார்கள். அதனால் தான் மக்கள் அவனைச் சந்தனவர் மனுக்குக் காட்டிக் கொடுக்க வில்லை. சித்திரரதன் பிடிக்கப் பட்டால் அவனுக்குக் கடுந் தண்டனை விதிக்கப்பட்டு விடுமோ என அவர்கள் பயந்ததே அதற்குக் காரணம். இவ்வாறு அவர்கள் உண்மையை மறைத்தது சித்திரரதனுக்குக் காட்டும் நன்றி



என எண்ணினார்கள்.

சித்திரரதனை எதிர்ப்பவர்கள் லஞ்சம் வாங்கும் அதிகாரிகளும் ஊழல்கள் புரிபவர்களுமே. அவன் தமக்கு இடைஞ்சலாக இருக்கிறானே என அவர்கள் நினைத்து அவன் தண்டனை பெற வேண்டுமென்று எண்ணினார்கள். இவ்வாறு எண்ணியவர்களில் அரசாங்க அதிகாரியான சித்திரநேமியும் ஒருவன் . எனவேதான் அவனே முயன்று சித்திரரதன் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்து மன்னனை அங்கு அழைத்து சென்றான். இது அவனது துரோக செயல். மக்கள் துயர் அறிந்து அதைப் போக்க முயல்பவனே நல்ல அரசன். அவன் மக்களின்



ஆதரவையும் மதிப்பையும் பெறுகிறான். மனிதனில் மனமே முக்கியம். சொல்லும் செயலும் உண்மையைப் பிரதிபலித்தாலும் மனம் அழுக்கானதானால் பயனில்லையே. எனவே மனத்தோடு சொல்லும் செயலும் ஒன்றி இருந்தாலே வாழ்வில் செழுமை காண முடியும். இதை நன்கு புரிந்து கொண்ட அரசனால் தான் நல்ல தொரு ஆட்சியைத் தர முடியும். அப்படிப்பட்டவன் தான் சந்தனவர்மன். மக்கள் நலனைப் பேணிய சித்திரரதனை மன்னனாக்கி, அவனது ஒரு சிறிது மாசு பட்ட வாழ்க்கையின் அசுத்தத்தைப் போக்கவே அற்பதண்டனையை அளித்தான். மகேசன் எவ்விதம் உள்ளானோ அவ்வாறுதான் மக்கள் இருப்பார்கள் இதைக் கருத்தில் கொண்டே சந்தனவர்மன் சித்திரரதனுக்கும், சித்திரநேமிக்கும் தண்டனைகளை விதித்தான். நான் சந்தனவர்மன் நிலையில் இருந்தால் அவன் அளித்தது போலவே தண்டனைகளை அளித்திருப்பேன்'' என்றான்.

இதைக் கேட்டதும் முதல் படியிலிருந்த பதுமை ''பேஷ், பேஷ். விஜயதத்தா! நான் கேட்டதற்குச் சரியான விளக்கம் கூறியதால் நீ என் பரீட்சையில் வெற்றி பெற்று விட்டாய். எனவே இந்தப் படியைக் கடந்து அடுத்த படி மீது நீ காலை வைக்கலாம்'' என்றது. பதுமை கூறியதைக் கேட்ட சபையோர் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். மன்னனும் அரசியும் ஸ்ரீலேகாவும் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தனர். மங்கள வாத்தியங்களும் முழங்கவே, இரண்டாவது படியில் விஜயதத்தன் தன் வலது காலை வைத்தான்.

இங்கு இப்படி நடந்து கொண்டிருக்கையில் காளிந்தி நாட்டில் ராணி வசுமதி கூட ஏதோ ஒரு வித மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்திருந்தாள். இதற்குக் காரணம் அன்று விடியற்காலையில் அவள் கண்ட நல்ல கனவே. இவ்வாறு சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கையில் அவளது கணவன் மாதவசேனன் அங்கு வந்தான். அவன் வசுமதியிடம் ''தேவீ!

கௌண்டனிய நாட்டிலிருந்து நற்செய்தி வந்துள்ளது. விஜய தத்தன் அங்கு வந்ததும் பூமிக்குள்ளிருந்து ஒரு தங்க சிம்மாசனம் கிடைத்துள்ளதாம். அதில் அவனை அமர்த்திப் பட்டாபிஷேகம் செய்யப் போகிறார்கள் என்ற செய்தி நம் ஒற்றர்கள் வாயிலாகத் தெரிய வந்துள்ளது'' என்றான்.

வசுமதியும் ''நான் இன்று காலை நல்லதொரு கனாக்கண்டேன். அதனால் இந்த சுபசெய்தி கிடைத்துள்ளது. எல்லாம் அந்த பகவானின் அருள்தான் . இந்தச் செய்தி மராளனுக்குக் கூடக் கிடைத்திருக்குமே'' என்றாள். மாதவசேனனும் ''ஆகா! தாராள மாகத் தெரிந்தே இருக்கும். இனி நடக்கப் போவதை அந்த பகவானின் மீது பாரத்தைப் போட்டு விட்டு போருக்குக் கிளம்புகிறேன்'' என்றான்.

வசுமதியும் ''கவலைப் படாதீர்கள். தெய்வம் நமக்குத் துணை நிற்கும். நம்மைக் கைவிட்டு விடாது. இன்னும் ஒரு முறை புறா மூலம் என் அண்ணனுக்கு லிகிதம் அனுப்பினால் அவனுக்குப் பூரண நம்பிக்கை ஏற்படும்'' என்றாள். மாதவசேனனும் ''தங்கசிம்மாசனம் கிடைத்ததற்கும் விஜயனின் பட்டாபிஷேகத்திற்கும் எம் நல் வாழ்த்துக்கள் என்ற செய்தியை அனுப்புகிறேன்'' என்று கூறி விட்டு அங்கிருந்து சென்றான்.

மாதவசேனன் அனுப்பிய புறா அச் செய்தியைக் கௌண்டனிய மன்னனுக்குக் கொண்டு சென்றது. அச்சமயம் விஜயன் தங்க சிம்மாசனத்தின் இரண்டாவது படியில் காலை வைத்து அங்குள்ள பதுமை கூறப் போகும் கதையைக் கேட்கத் தயாராக நின்றான். அப் பதுமையும் கதை சொல்ல ஆரம்பித்தது

(தொடரும்)



பாரதப் பண்பாட்டின் வரலாறு

ஒரு உயரிய நாகரீகத்தின் பல கட்டங்கள்

பரம்பரை பரம்பரையாக

உண்மையைக்காண ஆய்வு

## நர்மதை நதியின் தோற்றம்

சேகர் தன் தாயாரிடம் ''அம்மா! நான் சிறுவனாக இருக்கையில் வதோதராவில் (பரோடா) ஒரு நதியைப் பார்த்தேனே. அதன் பெயர் நர்மதை தானே?'' என்று கேட்டான். அவனது தாயார் ஜெயலட்சுமியும் ''ஆமாம் நன்றாக நினைவில் வைத்துக் கொண்டிருக் கிறாயே. அதில் படகில் போனதும் அந்த நதிக்கரையோர வீடு ஒன்றில் தங்கியதும் உனக்கு நினைவில் இருக்கிறதா?'' என்று கேட்டாள். சேகரும் ''ஏன் இல்லாமல்? அன்று காலையில் பார்த்த சூரியோதயம் கூட என் நினைவை விட்டு அகலவில்லை'' என்றான்.

சோமநாதர் தன் பேரனுக்கும் மருமகளுக்குமிடையே நடந்த சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்தார். அவர் சிரித்த வாறே ''சூரியோதயத்தை எங்கு பார்த்தாலும் அழகாகத்தான் இருக்கும். உனக்கு அன்று சூரியோதயத்தைப் பார்க்க வேண்டு மென்ற ஆவல் மிக அதிகமாக இருந்தது. அதனால் அன்று பார்த்ததை இன்றும் உன்னால் மறக்கமுடியவில்லை. இந்த மாதிரியான நிகழ்ச்சிகள் மறக்கமுடி யாதவையாக ஆகி விடுகின்றன. இதன் அடிப்படைக் காரணம் நாம் அவ்விஷயங்களில் முதலில் காட்டும் ஆர்வமே'' என்றார்.

சேகரும் ''அன்று நாங்கள் தங்கிய இடம் கர்னாலியுள்ள ஒரு ஆசிரமத் தில் தான். சுற்றிலும் மரங்களும் பசுமையான வயல்களும் இருந்தன. இவையாவும் மனதில் நிலைத்து விட இன்னும் ஏதோ காரணமும் இருப்பதாகச் சொன்னீர்களே, அது



என்ன?'' என்று கேட்டான். சோமநாதரும் ''சொல்கிறேன். அதைச் சற்று விளக்கி உங்களுக்கெல்லாம் புரியும்படிச் சொல்ல வேண்டும். எனவே நீயும் சியாமளாவும் கவனமாகக் கேளுங்கள்'' என்று கூறிச் சொல்ல ஆரம்பித்தார்.

இதைப் புரிந்து கொள்ள கடந்த காலத்தைப் பற்றி நீங்கள் கொஞ்சமாவது தெரிந்து கொண்டிருக்க வேண்டும் மனிதனுக்கு உடல், உயிர், மனது என்பன மட்டுமே உள்ளதென எண்ணிவிடாதீர்கள். இவற்றிற்கு மேலாக ஆத்மா என்பது உள்ளது. மனிதன் சிறுவனாக இருக்கும் போதே வளர்ச்சியுறத் தொடங்கினால் பிற்காலத்தில் வாழ்வு வளமுள்ளதாக இருக்கும் அழகிய காட்சிகளையும் பொருள்களையும் எவ்வித விகார எண்ணமும் இல்லாமல் ரசிக்க முடியும். சிறுவயதிலுள்ள இந்த நிலையில் மனிதனின் உடலும் மனமும் நாளாக ஆக வளர்ச்சியுறும் போது அவன் தனக்குக் கிடைக்கும் லாப நஷ்டங்களைக் கணக்குப் போட்டுப் பார்க்கிறான்.

விருப்பு வெறுப்புகள் அவனைப் பெரிதும் பாதிக்கின்றன. இவற்றிற்கு அடிமையாகி விட்ட மனிதனால் அழகிய காட்சிகளையும் பொருள்களையும் பார்த்து ரசித்துக் கொண்டிருக்க முடியாது. நல்லவிஷயங்களைப் பார்க்கவோ அல்லது கேட்கவோ அவன் விரும்புவதில்லை. இதுதான் நான் கூற வந்த காரணம்''.



இதை கவனமாகக் கேட்ட சேகரும் சியாமளாவும் ''புரிந்தது தாத்தா'' என்றனர். சேகரும் ''கர்னாலியை அப்படியே விட்டு விட்டோமே. நர்மதை நதிக்குக் கூட கங்கை நதி போல ஏதாவது சிறப்பு வரலாறு இருக்குமே. அது பற்றிக் கொஞ்சம் கூறுகிறீர்களா?'' என்று கேட்டான். சோமநாதரும் ''கொஞ்சம் என்ன நிறையவே சொல்கிறேன். நர்மதை நதிக்கு மட்டுமல்ல நம் நாட்டு நதிகளுக்கெல்லாம் அவற்றின் பிறப்பு பற்றிய கதைகள் உள்ளன. நர்மதை நதியின் பிறப்பு பற்றிய கதையும் அற்புதமானதே. அதைச் சொல்கிறேன். கேளுங்கள்'' என்று கூறி விவரமாகச் சொல்லலானார்.

ஒரு முறை பரமசிவன் அமர கர்ணம் மலை மீது

அமர்ந்து தியானத்தில் மூழ்கி இருந்தார். அவரது தேஜஸிலிருந்து ஒரு அழகிய கன்னிப் பெண் வெளி வந்து அவரை வணங்கினாள். சிவனாரும் அவளை ஆசீர்வதித்து'' ''மனதைக் கவர்ந்து மகிழ்விக்கும் உனக்கு நர்மதை என்ற பெயர் இருக்கட்டும்'' என்றார். அவளும் ''எம்பிரானே! நான் எப்போதும் எங்கும் சுதந்திரமாக இருக்க வரம் அருள வேண்டும்'' என்று பிரார்த்தித்தாள். சிவனாரும் அவள் கோரிய வரத்தைக் கொடுத்தார்.

நர்மதை கவலை இல்லாமல் மலைகளிடையேயும் மேடு பள்ளங்களிலும் குதித்து ஓடினாள். அவளது ஆட்டமும் பாட்டமும் தேவர்கள் பலரைக்கவர்ந்தன. ஒரு அழகன் அவள் முன் தோன்றி அவளைப் பிடிக்க முயன்றான். மறுகணமே அவள் நீராக மாறி பெருக்கெடுத்து அவனுக்கு அகப்படாமல் பூமிக்கு வந்து நதியாகப் பாயலானாள். கங்கை போல இதுவும் தெய்வாம்சம் கொண்டது.

இவ்வாறு சோமநாதர் கூறியதும் சேகரும் சியாமளாவும் கதை மிக நன்றாக உள்ளது என்றனர். சோமநாதரும்''இம்மாதிரி நதிகள் மரங்களும் செடிகளும் நிறைந்த காடுகள் வழியே பாய்கின்றன. இவற்றின் பெயர்களும் எவ்வளவு அழகானவை என்று பாருங்கள். கங்கை, யமுனை, நர்மதை, காவேரி, கோதாவரி, சரஸ்வதி, என்பன வெல்லாம் நமக்கு அவை பற்றிய கதைகளை நினைவூட்டுகின்றன. நதிகளின் பெயர்கள் மட்டுமல்ல, நகரங்களின் பெயர்களும் நாடுகளின் சிறப்புகளை நினைவூட்டுகின்றன'' என்றார்.

அப்போது சியாமளா ''இப்போதைய பாட்னா முன்பு பாடலிபுத்திரம் எனப் பெயர் பெற்றிருந்தது எனப் படித்திருக் கிறேன்'' என்றாள். சேகரும் ''அதற்கு முன் அதற்குப் புஷ்பபுரம்,

குசுமபுரம் எனவும் பெயர் இருந்ததாக படித்திருக்கிறேன்'' என்று பெருமை பொங்க கூறினான். அப்போது சோமநாதர் ''ஆம். இது போல துவாரகையை துவாராவதி என்றும் குவாலியரை கௌரி மார்க்கம் என்றும் லக்னௌவை லட்சுமணாவதி என்றும் கவா ஹாட்டியை பிராக் ஜோதிஷம் என்றும் கோவாவை கோமந்தகம் என்றும் கான்பூரை கர்ணபுரி என்றும் பழைய பெயராகக் குறிப்பிட்டுள்ளார்கள். இம்மாதிரி இன்னும் எவ்வளவோ சொல்லிக் கொண்டே போகலாம்'' என்றார்.

அப்போது சேகர் ''நாடுகளின் பெயர்களைக் கூறவில்லையே'' எனவே சோமநாதரும்'' ஆம். கர்நாடகத்தின் முந்தைய பெயர் குந்தளதேசம். புத்தவிஹாரங் களுள்ள நாடு தற்போதைய பீஹார் கஸ்யபமுனிவர் பெயரில் ஏற்பட்ட ஏரி கஸ்யபமேர் என்பது காஷ்மீர் என்றாகியது. ஜம்மு என்ற பெயர் ஒன்பதாவது நூற்றாண்டில் இருந்த ஜம்புலோசனன் என்ற மன்னனின் பெயரால் ஏற்பட்ட நாடாகும். நாகார்ஜுனர் என்ற பௌத்த முனிவர் பெயரில் நாகார்ஜுன மலை என்ற பெயர் வந்தது. ஜாபாலி என்ற முனிவரின் பெயரில் ஜபல்பூர் ஏற்பட்டது. இப்படியாக நாம் கூறிக் கொண்டே போனால் பட்டியல் நீண்டு கொண்டே போகும்'' என்றார்.

சேகரும் சியாமளாவும்''தாத்தா! இன்று நாங்கள் இதுவரை அறிந்திராத பல விஷயங்கள் பற்றித் தெரிந்து கொண்டோம். இப்போது பள்ளிக்குச் செல்லும் நேரம் வந்து விட்டது. நாங்கள் போய் வருகிறோம்'' என்று சொல்லிய வாறே கிளம்பிச் சென்றார்கள்.



# விற்பனை ஏன் கூடியது?

மாணிக்கம் மணலூரில் ஒரு மளிகைக்கடை வைத்து வியாபாரம் செய்து வந்தான். அவன் நாணயஸ்தன். நல்ல சரக்கு விற்பவன். சரியான எடை நிறுத்துப் போடுபவன் என்றெல்லாம் பெயர் பெற்றான். அவனது வியாபாரமும் நன்கு நடந்தது. கொஞ்ச நாட்களுக்குப்பின் அதே ஊரில் ஏழுமலை என்பவன் புதிதாக மளிகைக்கடை திறந்து வியாபாரம் செய்யலானான். கொஞ்ச நாட்களில் அவனது கடை வியாபாரம் அதிகமாகியது. மாணிக்கத்தின் வாடிக்கையாளர்களில் பலர் கூட ஏழுமலையின் கடையில் சாமான்கள் வாங்கலானார்கள்.

இதனால் மாணிக்கம் கவலைப்பட்டான். மாணிக்கமும் ஏழுமலையும் தம் கடைகளுக்கு வேண்டிய சாமான்களை பட்டணத்தில் ஒரே வியாபாரியிடமிருந்து தான் வாங்கி வந்தார்கள். விற்கும் சாமான்கள் தரம் ஒன்று போலிருக்க ஏழுமலையின் கடைக்கு மட்டும் ஏன் எல்லோரும் போகிறார்கள் என்று அவன் யோசித்துப்பார்த்தும் அவனும் சரியான விடை கிடைக்கவில்லை.

முடிவில் மாணிக்கம் அது பற்றி ஏழுமலையிடம் கேட்டான். ஏழுமலையும் சிரித்தவாறே'' அண்ணாச்சீ! நீங்கள் தராசில் சாமான் போடும் போது கொஞ்சமாகப் போட்டு கொஞ்சம் கொஞ்சமாகக் கூட்டிக்கொண்டு போய் சம எடைக்கு வந்ததும் கொடுக்கிறீர்கள். நான் முதலில் தாராளமாகப் போட்டு பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அதிலிருந்து எடுத்து சம எடைக்கு வந்ததும் கொடுக்கிறேன். நான் முதலில் சாமானை தாராளமாகப் போடுவதால் நிறையக் கொடுப்பதாக மக்கள் நினைக்கிறார்கள். நீங்கள் முதலில் தட்டில் சாமானைப் போடும் போது குறைத்து போடுவதால் நீங்கள் குறைத்துக் கொடுப்பதாக அவர்கள் எண்ணி விடுகிறார்கள். இது தான் என் கடை வியாபாரம் பெருகியதற்குக் காரணம்'' என்றான்!





# நிர்வாகத்தை மாற்று!

உமாபதி என்ற பணக்காரன் பட்டணத்தில் இருந்தான். அவன் கொஞ்ச நாட்களாக மன நிம்மதி இல்லாதிருந்தான். ஒரு நாள் ஒரு யோகி அவனது வீட்டிற்கு வரவே அவரை அவன் உபசரித்து நல்ல உணவும் படைத்தான். அதனை உண்டு இளைப்பாறிய யோகி ''அப்பனே! நீ எதையும் மனப்பூர்வமாகச் செய்யும் இயல்பு கொண்டிருக்கிறாய். நீ நெடு நாள் வாழ்க'' என்று வாழ்த்தினார்.

அப்போது உமாபதி ''சுவாமி! நான் எதையும் மனப்பூர்வமாகத் தான் செய்கிறேன். ஆனால் கொஞ்ச நாட்களாக ஏனோ என் மனதில் நிம்மதி இல்லையே'' என்றான். யோகி அவனது மனைவி, மக்கள், உறவினர் பற்றி விசாரித்து அவர்களால் அவனுக்கு எந்தத் தொல்லையும் இல்லை என்று தெரிந்து கொண்டார். பிறகு அவர் ''உனக்கு இந்த ஊரைத் தவிர வேறு ஊர்களில் நிலபுலன்கள் உள்ளனவா?'' என்று கேட்டார்.

உமாபதியும் ''சுற்றுப் பக்க ஐந்தாறு கிராமங்களில் வயல்கள் உள்ளன. அதன் குத்தகைக்காரர்கள் ஒழுங்காகக் குத்தகை கொடுக்கிறார்கள். அவற்றால் பிரச்சினை எதுவும் இல்லை. மலையூர் என்ற ஊரில் என் முன்னோர்கள் கட்டிய ஆலயம் உள்ளது. அதற்கு நூறு ஏக்கர் நிலத்தை அவர்கள் மானியமாகக் கொடுத்திருக்கிறார்கள். அங்கு தேர்த்திருவிழா ஆண்டுதோறும் கோலாகலமாக நடந்து வருவது வழக்கம். ஆனால் கடந்த இரண்டு ஆண்டுகளாக அவ்வளவாக விமரிசையாக நடக்கவில்லை. இதை பகவானே சரி செய்து கொள்ளட்டும் என்று அவர் மீது பாரத்தைப் போட்டு விட்டேன்'' என்றான்.

சங்கர வெங்கடாசலம்



யோகி அப்போது புன்னகை புரிந்து ''அப்பனே! கடவுள் இருக்க இடமே இல்லை என்றா உன் முன்னோர்கள் இந்த ஆலயத்தைக் கட்டினார்கள்? அவருக்கு சொத்து இல்லை என்றா அக்கோவிலுக்கு நூறு ஏக்கர் நிலத்தைக் கொடுத்தார்கள்? விழா நடத்த ஏற்பாடு செய்திருப்பார்களே'' என்றார். உமாபதியும் ''ஆமாம் தேர்த்திரு விழாவின் போது நானும் என் மனைவியும் அங்கு செல்லுவது வழக்கம். கடந்த இரண்டு ஆண்டுகளாக விழா நிகழ்ச்சிகளில் ஏதோ குறை இருப்பதாக உணர்கிறேன். அது என்ன என்று தெரியாததால் அவரே சரி செய்து கொள்ளட்டும் என்று விட்டு விட்டேன்'' என்றான்.

யோகியும் ''இதுதான் நீ நிம்மதியை இழந்ததற்குக் காரணம். ஆலயம் என்பது ஒருவரின் சுகதுக்கங்களுக்காக நிர்மாணிக்கப்படுவதல்ல. அதனால் பலர் பிழைக்கிறார்கள். எவ்வளவோ பேர்கள் தம் பாவங்களை போக்கிக் கொள்ள சுவாமி தரிசனம் செய்ய அங்கு வருகிறார்கள். பலர் மேலும் புண்ணியம் சம்பாதித்துக் கொள்ள வருகிறார்கள். அப்படிப்பட்ட ஆலயத்தைத் திறம்பட நிர்வகித்து வர வேண்டியது உன் கடமை, உன் கடமையிலிருந்து தவறியதால்தான் உன் மனதில் நிம்மதி இல்லாமல் போய் விட்டது'' என்றார்.

அது கேட்டு உமாபதி ''சுவாமி! இப்போது நான் என்ன செய்ய வேண்டுமென்று கூறுங்கள். அதைச் செய்கிறேன்'' என்றான். யோகியும் ''கோவில் நிர்வாகம் சரியாக உள்ளதா எனப் பார்த்து அது சரியாக இல்லாவிட்டால் அதைச் சரி செய்ய வேண்டும். எனவே நீ மலையூருக்கு உடனே போய் கோவில் நிர்வாகத்தைச் சரி செய். அப்போது எல்லாம் சரியாகிவிடும்'' என்றார்.

அப்போது உமாபதி ''சுவாமி! கோவிலின் அர்ச்சகர்களின் பணிகளையும் மற்ற பணியாட்களின் வேலைகளையும் கண்காணித்து வர இரண்டு ஆண்டுகளுக்கு முன்வரை ராமநாதன் என்ற வயோதிகர் இருந்தார். அவருக்குக் குடும்பம்

என்று ஒன்றும் இல்லை. கோவிலிலேயே இருந்து காலம் கழித்தவர். அவர் காலமாகி விடவே அவருடைய வேலைக்கு ரகுநாதன் என்பவன் நியமிக்கப்பட்டான். இந்த நியமனத்திற்குப் பிறகுதான் விழாவில் குறைபாடு ஏற்பட்டதை உணர்ந்தேன்'' என்றான்.

யோகியும் ''நான் ஊகித்தது சரியே. கோளாறு நிர்வாகத்தில் தான் உள்ளது. அந்த ரகுநாதனை வேலையை விட்டு நீக்கிவிடு. வேறு திறமைசாலியான ஒருவனை அவனுக்குப் பதிலாக நியமித்து விடு'' என்றார். உமாபதியும் ''இந்த ரகுநாதனுக்கு பூஜை செய்யும் விதிமுறைகள் நன்கு தெரியும். இசையில் வல்லவன். இலக்கியங்கள் கற்றவன். கணக்குகளை ஒழுங்காக எழுதிவருபவன். இவனைவிட திறமையானவன் கிடைப்பது கடினமே. இவனது நேர்மையை யாரும் சந்தேகிக்கவில்லை'' என்றான்.

அப்போது யோகி ''இந்த ரகுநாதன் ராமநாதனைப் போன்றவனா?'' என்று கேட்டார். உமாபதியும் ''இல்லை. ராமநாதன் கடவுள் பக்தியைத் தவிர வேறு எதுவும் அறியாதவர்''. எனவே யோகி ''அப்படியானால் குறை வேறு எங்கோ உள்ளது. அதைக் கண்டுபிடிக்க நானும் உன்னுடன் மலையூருக்கு வருகிறேன்.



என்னாலான உதவியைச் செய்கிறேன்'' என்றார். மறுநாள் யோகியும் உமாபதியும் மலையூருக்குப் போய் அங்கு கோவிலில் நடப்பனவற்றை எல்லாம் கவனமாகப் பார்த்தார்கள்.

ரகு நாதன் உமாபதி கூறியபடி எல்லாவிதத்திலும் சிறந்தவனே. ஆனால் அவன் தன் மனைவியின் சொல்லைத் தட்டாதவன். அவள் ஆட்டி வைக்கிறபடி ஆடுபவன். ரகுநாதனின் மனைவி சீதாமணியும் பக்தி கொண்டவளே. எல்லோருக்கும் உதவும் இயல்புடையவள். ஆனால் தான் பிரபலமாகி எதிலும் முன்னால் இருக்க விரும்புபவள். எதையும் ஆர்ப்பாட்டமாகச் செய்பவள். நிறைவுறச் செய்யாதவள். தன் வேலைகளையெல்லாம்

தன் கணவனை செய்ய வைப்பவள். எனவே ரகுநாதன் எப்போதும் ஏதாவது ஒரு வேலையைச் செய்து கொண்டே இருந்ததால் கோவில் வேலைகளைச் சரிவர கவனிக்க முடியவில்லை. சீதாமணி கோவில் சிப்பந்திகளைக் கூட தன் வீட்டு வேலைகளைச் செய்ய வைத்து வந்தாள்.

இவற்றைப் பார்த்த யோகி உமாபதியிடம் ''நீ ரகுநாதனை வேலையிலிருந்து நீக்கி விட்டு அவனது வேலையை அவனது மனைவி சீதாமணிக்குக் கொடுத்து விடு'' என்றார். இதைக் கேட்ட ரகுநாதன் திடுக்கிட்டு ''சுவாமி! என் மனைவிக்கு பூஜை முறைகள் பற்றி எதுவும் தெரியாதே. மேலும் கோவில் நிர்வாகம் பற்றி எதுவும் அறியாதவள். அவளுக்கா இந்த வேலை?'' என்று கேட்டான்.

யோகி சிரித்தவாறே ''நிர்வாகம் என்பது சரியான கண்காணிப்பு. இது ஒரு தனிக்கலை. ரகுநாதன் அதைக் கற்கவில்லை. அதனால் ஆலயப் பணிகள் சரிவர நடை பெற வில்லை. யாரைக் கொண்டு எந்த வேலையைச் செய்விக்க வேண்டு மென்று அவனுக்குத் தெரியாது. சீதாமணியிடம் நிர்வாகத்தைக் கொடுத்தால் கர்வத்தோடு எல்லோரி டமும் வேலை வாங்குவாள். ரகுநாதன் சீதாமணி சொல்லும் எந்த வேலையையும் செய்பவன் அவனைக் கோவில் வேலையிலி ருந்து நீக்கி விட்டாலும் அவன் வேலையில் இருப்பது போலத் த்தான். ஏனெனில் சீதாமணிதான் அவனை ஆட்டி வைத்து வேலை வாங்கப் போகிறாளே'' என்றார்.

ரகுநாதன் மறுபேச்சு பேசாமல் யோகி சொன்னதை ஏற்றான். நிர்வாகம் பெயருக்கு சீதாமணி யிடம் இருந்தாலும் வேலை செய்தது எல்லாம் ரகுநாதனே. இதற்குப்பின் தேர்த்திருவிழா அங்கு எவ்விதக் குறையுமில்லாமல் சிறப்பாக நடைபெற்று வந்தது. உமாபதிக்கும் நிம்மதி ஏற்பட்டது.



காவேரிக் கரைஓரமாய்...8

# பழங்காலக் கல்லணை

கருத்து : ஜெயந்தி மகாலிங்கம்
ஓவியம் : கௌதம் சென்



செயிண்ட் ஜான்ஸ் சர்ச்

பழங்கால இந்துக் கோவில்களுக்குப் பேர் போனது போல 18,19வது நூற்றாண்டுகளில் பிரிட்டீஷார் கட்டிய கிருஸ்துவ மாதா கோவில்களும் அழகிய கட்டடங்களுக்கும் திருச்சி பெயர் பெற்றது. 1766ல் தெப்பக்குளத்திற்குவடக்கே ஒரு மாதா கோவில் கட்டப்பட்டது. 1816ல் கன்டோன்மென்ட் பகுதியில் கோட்டைக்குத் தெற்கே சென்ட் ஜான்ஸ் சர்ச் கட்டபட்டது. தெப்பக் குளமருகே 1840ல் அவர் லேடி ஆப் லூர்த்ஸ் என்ற கேதலிக் ஆலயம் கட்டப்பட்டது. அன்று ராபர்ட் க்ளைவ் வசித்த மாளிகை தான் இன்றைய சென்ட் ஜோசப் கல்லூரியின் ஒரு பகுதி.

இத்தீவில் திருவானைக்கா ஆலயம் உள்ளது. உயரமான கோபுரமும் கல் மண்டபங்களும் சிற்பங்களும் இங்கு உள்ளன. கி.மு. முதலாவது நூற்றாண்டில் கோச்செங்கண்ணன் என்ற சோழ மன்னன் இக்கோவிலை கட்டினானாம்.

இங்குள்ள அப்பு (நீர்) லிங்கம் மிகவும்



ஜம்புகேசுவர ஆலயம்

தாழ்வான இடத்தில் இருப்பதால் எப்போதும் நீரில் உள்ளது. இங்கு நீர் ஊறிக் கொண்டே இருக்கிறது. ஒரு காலத்தில் இங்கு ஜம்பு விருட்சங்கள் (நாவல் மரங்கள்) நிறைந்திருந்தனவாம்.

அவற்றின் கீழ் ஒரு லிங்கம் இருக்க அதனை ஒரு யானையும் சிலந்தியும் வழிபட்டு வந்தன. சிலந்தி லிங்கத்தின் மீது தூசி படாமலிருக்க வலை கட்டுமாம். யானை துதிக்கையில் காவேரி நீரை நிரப்பி சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்யுமாம். அப்போது வலை கலைந்து நீரில் விழுந்து விடுமாம். இதனால் கோபம் கொண்ட அந்தசிலந்தி யானையின் துதிக்கைக்குள் நுழைந்து, கொட்டி அதனைக் கொன்று விட்டதாம். அந்தச்சிலந்தி தான் அடுத்த பிறவியில் கோச்செங்கண்ண மன்னனாய்ப் பிறந்து உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சோழ அரசன்.



யானை தினமும் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்தல்

இப்பெரிய கோவிலுக்கு உயரமான கோபுரங்களும் ஐந்து பிராகாரங்களும் உள்ளன. நான்காவது பிராகாரத்தில் தான் அகிலாண்டேஸ்வரியின் ஆலயம் உள்ளது. இங்கு ஆதி சங்கரர் சக்கரம் பதிப்பித்து இந்த அம்மனின் உக்கிரத்தைக் குறைத்தாராம். சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசாமி தீட்சிதர் அகிலாண்டேஸ்வரியின் புகழ் பாடி இருக்கிறார்.

தமிழ் நாட்டு சிவத்தலங்களில் திருவானைக்கா முக்கியமான ஒன்று. சோழ, பாண்டிய, ஹோய்சால, நாயக்க மன்னர்கள் இக்கோவிலுக்கு மானியங்களை அளித்து மதில் சுவர்களையும் கட்டினார்கள். இக்கோவில் பல முறை சீராக்கிக் கட்டப்பட்டதாகும். கர்நாடகப் போரில் பிரெஞ்சுப் படை ஆங்கிலேயர் படையிடமிருந்து தப்ப இக்கோவிலில் ஒளிந்து கொண்டது.

ஸ்ரீரங்கத்திலிருந்து சற்று தூரத்தில் மேற்கே முக்கொம்பில் காவேரி, கொள்ளிடம் என்று இரு நதிகளாகப் பிரிகிறது. கிழக்கே தீவின் முடிவில் காவேரியும் கொள்ளிடமும் மிக நெருங்கிப் பாயும் இடத்தில் கல்லணை கட்டப்பட்டது. கி.பி.2வது நூற்றாண்டில் கரிகால் சோழன் இதனைக் கட்டியதாகக் கூறுகிறார்கள். இது வெள்ளத்தைக் கட்டுப்படுத்தவும் விவசாயத்திற்கான நீரை அளிக்கவும் கட்டப்பட்ட பழங்கால அணை. இதன் நீளம் 329மீ. 12–18மீ அகலம் 4-5 மீ உயரம். 1800ல் சர் ஆர்தர் காட்டன் என்ற பொறியாளர் தலைமையில் இது மீண்டும் சீராக்கப்பட்டது. 1830ல் பெரிய மதகுகள் அமைக்கப்பட்டன.

மேலணை 1836-38ல் முக்கொம்பினருகே கட்டப்பட்து. இதன் 22 மதகுகளின் மொத்த நீளம் 780மீ. 2மீ உயரம். 1890ல் இது முழுமையாகச் செப்பனிடப்பட்டது. கல்லணைக்குக் கீழுள்ள பகுதியில் காவேரி வெண்ணாறு ரெகுலேடர் அமைக்கப்பட்டது. வெண்ணாறு,கண்ணாறு பாமினி,குடமுருட்டி, அரசலாறு முதலியன காவேரியிலிருந்து பிரியும் கிளை நதிகள். இவற்றால் டெல்டாப் பகுதியில் நன்கு விவசாயம் நடைபெறுகிறது.



இந்த அணைக் கட்டின் வட்புறத்தில் ராஜேந்திர சோழன் தன் நாட்டின் தலைநகராக்கிக் கொண்ட கங்கை கொண்ட சோழபுரம் உள்ளது.

ராஜேந்திர சோழன் வடநாடுகள் மீது படை எடுத்து போய் வெற்றி பெற்று கங்கை நீரை எடுத்து

மிகப்பெரிய கல்லணை



வந்ததால் கங்கை கொண்டான்' என்ற பெயர் பெற்றான். இவன் கட்டிய பெரிய கோவிலும் இங்குள்ளது. இது தஞ்சை பிரஹதீசுவரர் ஆலயத்திற்கு இணையானது. இதன் கோபுரம் அவ்வளவு உயரமில்லாது போனாலும் ஆலயத்தின் பரப்பளவு அதிகமானது. எல்லா விதத்திலும் இந்த ஆலயம் தஞ்சைக் கோவிலைப் போலுள்ளது.

கங்கை கொண்ட
சோழபுரக்கோவில்

எக்காரணத்தால் பிற்காலத்தில் மக்கள் இவ்வூரை விட்டு வெளியேறினார்கள் என்று தெரியவில்லை.

இதன் பிறகு இந்த ஆலயம் கவனிப்பாரற்றுப் போயிற்று. இதன் கற்கள் கல்லணை சீரமைப்பிற்குப் பயன்பட்டன.

தஞ்சை மாவட்டம் சோழ மண்டலம் என்று பெயர் பெற்றிருந்தது. கி.பி.9வது நூற்றாண்டில் தஞ்சாவூர் சோழ மன்னனின் தலை நகராகியது. சங்க காலத்திலேயே காவேரி டெல்டாப் பகுதியில் சோழர்களின் ஆட்சி இருந்தது. தென்னிந்தியாவிலேயே சோழர்கள் ஒரு வல்லரசாக 13வது நூற்றாண்டு வரை திகழ்ந்தார்கள்.



# கந்த பூரணி

முத்தம்மா இறக்குமுன் தாய் தந்தையரற்ற தன் பேரன் கந்தனுக்கு ஐயாயிரம் ரூபாயைப் பரண் மீதுள்ள ஒரு ஜாடியில் போட்டு வைத்து விட்டு அதனை அவனிடம் கூறி ''கந்தா! நீ அப்பாவி. எதற்கும் பயப்படுப வன். இதை இந்த ஊரார் அறிவார்கள். அதனால் நீ இந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு பட்டணத்திற்குப் போய் நான்கு எருமைகளை வாங்கி பால் வியாபாரம் செய்து பிழைத்துக் கொள்'' என்று கூறினாள்.

கந்தனும் தன் பாட்டி கூறியபடி பட்டணம் போக ஏற்பாடுகளைச் செய்யலானான். பட்டணத்தில் முதலில் வாடகைக்கு ஒரு வீடு பார்த்து விட்டு பிறகு சாமான்களை அங்கு எடுத்துப் போக அவன் நினைத்தான். ஆனால் கிராமத்து வீட்டில் ஐயாயிரம் ரூபாயை வைத்துவிட்டு வீட்டைப் பூட்டி விட்டுப் போனால் ஆபத்து என எண்ணினான். பணத்தை நம்பிக்கையான ஒருவரிடம் கொடுத்து வைத்திருக்கச் சொல்லி விட்டு போகலாம். யாரிடம் பணம் கொடுப்பது என யோசித்த போது தன் பாட்டி அவ்வப்போது தனக்குக் கிடைத்த பணத்தை அவ்வூர் வட்டிக் கடை வீராசாமியிடம் கொடுத்து வாங்கி வந்தது அவன் நினைவிற்கு வந்தது.

அவன் தன் பணத்தை ஒரு பையில் போட்டு எடுத்துக் கொண்டு வீராசாமியின் வீட்டை அடைந்தான். அப்போது வீராசாமிக்கும் அவன் மனைவிக்குமிடையே வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. வீராசாமியின் மாமியார் திருப்பதிக்கு போகும் வழியில் அவ்வூருக்கு வந்து தன் மகள் வீட்டில் ஒருநாள் தங்கி விட்டுப் போகப் போகிறாளாம். அதனால் தன் தாயாருக்கு ஒரு புடவை வாங்கிக் கொடுக்க வேண்டுமென வீராசாமியின் மனைவி கூற,

பாபநாசம் சாமா



வீராசாமி அதெல்லாம் முடியாது என்றான். இதனால் பலத்த சச்சரவு ஏற்பட்டது.

இந்த சமயத்தில் கந்தன் வரவே வீராசாமி தன் மனைவியிடம் ''அடுப்பில் ஏதோ தீய்கிறது. போய்ப்பார்'' என்று கூறி அவளை அனுப்பிவிட்டு கந்தனிடம் என்ன சமாசாரம் என்று கேட்டான். அவனும் தான் பட்டணம் போகப் போவது பற்றிக் கூறி ''அங்கே ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்திய பின் நான்கு நாட்களில் இங்கு திரும்பி வருவேன். அதுவரை என் இந்த ஐயாயிரம் ரூபாயை நீங்கள் வைத்திருந்து நான் வந்து கேட்டதும் திருப்பிக் கொடுங்கள்'' என்று கூறிப் பணப்பையை வீராசாமியிடம் கொடுத்தான். வீராசாமியும் ''ஆகா! உன் போன்றவர்களுக்கு உதவினால் எனக்குப் புண்ணியம் கிடைக்கும்'' என்று கூறிப் பணத்தை வாங்கிக் கொண்டான்.

அந்த சமயத்தில் வீராசாமியின் மனைவி தண்ணீர்க்குடத்தை எடுத்து சுவரின் மீது பலமாக அடிக்கவே அது சுக்கல் சுக்கலாக நொறுங்கிக் கீழே விழுந்தது. அந்த சத்தம் கேட்டு கந்தன் ''என்ன அது?'' என்று கேட்கவே வீராசாமியும் ''அது பூகம்பம். நீ பத்திரமாகப் பட்டணம் போய்விட்டு சௌக்கியமாய்த் திரும்பி வா'' என்று கூறி அனுப்பினான். கந்தனும் மறுநாள் கிளம்பி பட்டணம் போய் அங்கு வாடகைக்கு வீடு கிடைக்குமா என்று அலைந்து பார்த்தான். எதுவும் கிடைக்காததால் அந்நகரின் ஒதுப்புறமாக உள்ள ஒரு வீட்டைக் கண்டான். அங்குபோய் கதவைத் தட்டவே பதினெட்டு வயதுள்ள பெண் ஒருத்தி கதவைத் திறந்து வந்து ''என்ன வேண்டும்?'' என்று கேட்டாள்.

கந்தனும் ''முதலில் குடிக்கத் தண்ணீர். பிறகு இங்கு வாடகைக்கு வீடு கிடைக்குமா என்று தெரிந்து கொள்ள'' என்றான். அவளும் ''அப்பா! அங்கே யாரோ வந்து என்னவோ கேட்கிறார். வந்து பாருங்கள்'' என்று சொல்லிவிட்டு அங்கிருந்து சென்றாள். வந்த மனிதனும் ''நீ வித்தியாசமாக நினைக்காதே. இவ்வளவு பெரிய வீட்டில் நானும் என் மகள் பூரணியும் தான் இருக்கிறோம். புதிதாக யாரையாவது கண்டால் என் மகளுக்கு பயம். வீட்டை

வாடகைக்கு விடலாமென எண்ணினாலும் ஊரிலிருந்து ஒதுக்குப்புறமாக இருப்பதால் யாரும் இங்கே வர இசைவதில்லை'' என்றான்.

இதற்குள் பூரணி குடிக்கத் தண்ணீர் கொண்டு வரவே கந்தன் அதை வாங்கிக் குடித்தான். அவனிடம் பூரணியின் தந்தை எல்லா விவரங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டு ''நீ எருமைகளை வாங்கி இங்கே கட்டி வைத்துக் கொண்டு பால் வியாபாரத்தை ஆரம்பிக்கலாம். வாடகை என்று நீ என்ன கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறேன்'' என்றான். அப்போது பூரணி குறுக்கிட்டு ''அப்படியெல்லாம் இல்லை. எதையும் வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று பேச வேண்டும். மாசத்திற்கு வாடகையாக நூறு ரூபாய் கொடுக்க வேண்டும்'' என்றாள்.

இரண்டு நாட்களுள் சாமான்களுடன் வருவதாகக் கூறிவிட்டு கந்தன் தன் ஊருக்குச் சென்றான். அங்கு வீராசாமியைக் கண்டு தான் கொடுத்த பணத்தைக் கேட்கவே, வீராசாமி ''நீ என்னிடம் பணம் கொடுத்தாயா? இல்லையே'' என்றான். கந்தனோ ''ஐயாயிரம் ரூபாய் கொடுத்தேனே. பட்டணத்திலிருந்து திரும்பி வந்து வாங்கிக் கொள்வதாகச் சொன்னேனே. நினைவில்லையா?'' என்று கேட்டான்.

வீராசாமியும் ''நீயா! ஐயாயிரமா!! என்னிடமா கொடுத்தாய்? பைத்தியக்காரத்தனமாக உளராதே''



என்று கத்தினான். இதற்குள் அங்கு பலர் கூடி விட்டனர். அப்போது வீராசாமி ''இந்தப் பைத்தியக்காரன் என்னிடம் ஐயாயிரம் ரூபாய் கொடுத்தானாம். அதைக் கொடு என்கிறான். நான் இவனிடம் பணமே வாங்கவில்லை. எப்போது கொடுத்தான், யார் சாட்சி என்று கேளுங்கள்' என்றான். அப்போது கந்தன் ''இரண்டு நாட்களுக்கு முன்புதான். பூகம்பம் வந்ததே அன்றுதான்'' என்றான். வீராசாமியும் ''இரண்டு நாட்களுக்கு முன் பூகம்பம் வந்ததாம்! அன்று பணம் கொடுத்தானாம்! நமக்கெல்லாம் தெரிந்து இந்த ஊரில் பூகம்பமே வந்ததில்லை. என்ன உளறுகிறான் பார்த்தீர்களா?'' என்று அங்கு கூடி இருந்தவர்களிடம் கேட்டான். அவர்களும் ''ஆமாம், உளறல்தான்''



எனவே வீராசாமி கந்தனை விரட்டி விட்டான்.

இந்த ஏமாற்றத்தைத் தாங்க முடியாமல் கந்தன் பட்டணத்திற்குத் திரும்பி சென்று பூரணியின் தந்தையிடம் வீராசாமியிடம் தான் ஏமாந்து போனதைக் கூறி ''நான் உங்கள் வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொள்ள முடியாது. இந்தப்பட்டணத்தில் ஏதாவது வேலை செய்து எங்காவது தங்கிக் கொள்கிறேன்'' என்றான். பூரணியின் தந்தையும் ''எல்லாம் அவனவன் தலை எழுத்துப் போலத் தான் நடக்கும்'' என்றான்.

கந்தன் கூறியதை முழுவதும் தன் தந்தையருகே இருந்து கேட்டுக் கொண்டிருந்த பூரணி ''வீராசாமி போன்றவர்களை இப்படியே விடக்கூடாது. கந்தனிடமிருந்து அவன் பெற்ற பணத்தையாவது திரும்ப வாங்க வேண்டும். அதற்கு ஒரு வழி சொல்கிறேன்'' எனச் சொல்லி தன் தந்தையிடமும் கந்தனிடமும் அவர்கள் என்ன செய்ய வேண்டுமென்பதைக் கூறினாள். அதன் படி அவர்களிருவரும் கந்தனின் ஊருக்குச் சென்றார்கள். பூரணியின் தந்தை வேலைப்பாடுடன் கூடிய பளபளக்கும் பெட்டி ஒன்றை எடுத்துச் சென்றான்.

ஊரை அடைந்ததும் கந்தன் பூரணியின் தந்தைக்கு வீராசாமியின் வீட்டைக் காட்டி விட்டுத் தன் வீட்டிற்குச் சென்றான். அப்போது இருட்டிவிட்டது. பூரணியின் தந்தை பளபளக்கும் பெட்டியுடன் வீராசாமி வீட்டிற்குச் சென்றான். அப்போது வீராசாமி தன் வீட்டின் முன் நாற்காலியில் அமர்ந்திருந்தான். பூரணியின் தந்தை அவனை வணங்கியவாறே அவன் பக்கத்திலிருந்த நாற்காலியில் அமர்ந்து ''ஐயா! நான் பட்டணத்திலுள்ள பணக்காரன். இந்தப் பெட்டியில் அறுபதாயிரம் ரூபாய் உள்ளது. இது என் மகள் திருமணத்தின் போது செலவு செய்ய வேண்டிய பணம். என் மகளை இவ்வூரிலுள்ள கந்தனுக்குக் கல்யாணம் செய்து வைப்பதாக உத்தேசம். கல்யாணம் அவனது பாட்டியின் பிரார்த்தனைப்படி இவ்வூர் கோவிலில் இன்றைக்கு எட்டாவது நாள் நடக்கும். இந்த ஊரில் நீங்கள் பெரிய மனிதர், நேர்மையானவர் என்று கேள்விப்பட்டேன். அதனால் இந்தப் பணப்பெட்டியை உங்களிடம் கொடுக்கிறேன். தேவைப்படும்

போது அவ்வப்போது இதிலிருந்து பணம் எடுத்துச் செலவு செய்கிறேன்'' என்றான்.

அது கேட்டு வீராசாமி ஒரேயடியாக மகிழ்ந்து ''ஆகா! தாராளமாக அப்படியே செய்யுங் கள்'' என்று கூறிக் கொண்டிருக்கும் போதே கந்தன் அங்கு வந்தான். அவன் வீராசாமியிடம் ''அன்று உங்களிடம் நான் பணம் கொடுத்தபோது உங்கள் வீட்டு சமையலறையில் ஏதோ தீய்ந்து போன வாசனை வரவே உங்கள் மனைவி சென்றாள். உள்ளே ஏதோ சத்தம் கேட்க நீங்கள் கூட பூகம்பம் என்றீர்களே. இப்போதாவது நினைவுபடுத்திக் கொண்டு என் ஐயாயிரம் ரூபாயைக் கொடுக்கிறீர் களா?'' என்று கேட்டான்.

வீராசாமியிடம் ''ஞாபகத்திற்கு வருகிறது. நான் நேர்மை தவறாத வன். உன் போன்ற அப்பாவியை ஏமாற்றமாட்டேன். உன் பணத்தை வாங்கிக் கொள்'' என்று கூறி வீட்டினுள் போய் ஐயாயிரம் ரூபாயை எடுத்து வந்து கந்தனிடம் கொடுத்தான். கந்தனும் பணத்தை வாங்கிக் கொண்டு சென்றான்.

அப்போது வீராசாமி கர்வத்துடன் ''பார்த்தீர்களா என் நேர்மையை! இந்தக் கந்தன் அப்பாவி. மூளை இல்லாதவன். அன்றைக்கு இவன் கொடுத்த பணத்தை கொடுக்காமல் ஏமாற்றி இருக்கலாம். அப்படி நான் செய்யவில்லை சரி. உங்கள் பெட்டியைக் கொடுங்கள்'' என்றான்.

பூரணியின் தந்தை பெட்டியை எடுத்துக் கொண்டு ''இந்த முட்டாள் கந்தனுக்கு என் பெண்ணைக் கொடுக்கமாட் டேன்'' என்று கூறிவிட்டு அங்கி ருந்து சென்றான். வீராசாமியோ அறுபதாயிரம் ரூபாயை அடைய முடியவில்லையே எனத் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

பூரணியின் தந்தை கந்தனுடன் பட்டணம் திரும்பினான். கந்தன் எருமைகள் வாங்கி பூரணியின் யோசனைப்படி நன்கு பால் வியாபாரம் செய்தான். பூரணியின் தந்தை அவளைக் கந்தனுக்கே விவாகம் செய்து வைத்தான்.



# ஆக்கபூர்வமான போட்டிகள்

**பிரசுரிக்கத்தக்கதான கதை பிப்ரவரி போட்டி**
**(பழமொழி: தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளிர்ச்சி)**

# நகர வாசம்

கீழப்புதூரில் குப்புசாமி ஏழைக்குடியானவன் ஒரு ஏக்கர் நிலத்தை உழுது பயிர் விளைவித்து நெல் விற்று அந்தப் பணத்தால் குடும்பத்தைக் காத்து வந்தான். அவனது தாய், மனைவி, ஒரு மகன், மூன்று பெண்கள் என்பது அவன் குடும்பம்.

அவனது மனைவி கிராம வாழ்க்கையை வெறுத்து நகர வாழ்க்கையையே விரும்பினாள். மகன் பெரிய படிப்பு படிக்கவும் பெண்கள் இசை நடனம் எனக் கற்கவும் நகரமே ஏற்றது எனக்கூறி தன் கணவனை கிராமத்திலிருந்து நகரத்தில் குடிபுகச் செய்தாள். ஆனால் குப்புசாமியின் தாயார் மட்டும் நகருக்குச் செல்லாமல் கிராமத்து வீட்டிலேயே இருந்தாள்.

நகர வாழ்க்கை முதலிரண்டு மாதங்கள் இனிமையாக இருந்தது. அதற்குப்பின் வீட்டு வாடகை மகனுக்குப் பள்ளிக் கட்டணம், மகள்களுக்கு இசை, நாட்டியம் கற்பிக்கப்பணம் உடை என்று குப்புசாமி அது வரை சேர்த்து வைத்திருந்த பணம் கரைந்து விட்டது. ஊர் நிலத்தை ஓராண்டிற்கு குத்தகைக்கு விட்டான். அவனும் நகரில் வேலை செய்தான். அப்போதும் குடும்பத்தில் எல்லோரும் வயிறு நிறையச் சாப்பிட முடியவில்லை. நகரத்துச் செலவுக்கு அவனால் ஈடு கொடுக்க முடியவில்லை.

குப்புசாமியின் மனைவிக்கும் அந்த ஒருவருட நகர வாழ்க்கையில் வெறுப்பே ஏற்பட்டது. அப்போது தான் கிராம வாழ்க்கையே தன் குடும்பத்திற்கு ஏற்றது எனக் கண்டு கொண்டாள். அதனால் வருட முடிவில் அக்குடும்பம் கிராமத்திற்கே வந்து விட்டது. அதன்பின் அவர்கள் நன்கு உண்டு எப்போதும் போல எளிய வாழ்க்கை நடத்தினார்கள்.

குப்புசாமியின் மனைவிக்கும் தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளிர்ச்சி என்பதன் பொருள் விளங்கியது.

**பி.சீதாலட்சுமி, சாத்தூர்.**

## சிகண்டியின் கதை

# மகாபாரதம்

பீஷ்மர் இரு தரப்பு வீரர்களைப் பற்றி துரியோதனனுக்கு எடுத்து உரைத்துக் கொண்டிருந்தார். அப்போது துரியோதனன் ''சிகண்டி போர் புரிய வந்தால் நீங்கள் ஏன் அவனுடன் போரிட மாட்டீர்கள்?'' என்று கேட்டான். அதற்கு பீஷ்மர் ''என் தந்தை சந்தனு மன்னர் இறந்த பின் நான் சித்திராங்கதனை மன்னனாயும் விசித்திரவீரியனை இளவரசனாகவும் ஆக்கினேன். கொஞ்ச காலத்திற்குப் பின் சித்திராங்கதன் இறக்கவே விசித்திர வீரியனை மன்னனாக்கினேன். அவனுக்கு விவாக வயது வந்ததும் அவனுக்கு ஏற்ற பெண்ணை தேர்ந்தெடுத்து மணம் செய்து வைக்கத் தீர்மானித்தேன்'' என்று கூறி மேலும் தொடர்ந்தார்.

''அப்போது காசி மன்னனின் மூன்று புதல்விகளுக்கு சுயம்வரம் நடக்கப் போவது எனக்குத் தெரிந்தது. அவர்கள் அழகானவர்கள். அம்பை, அம்பிகை, அம்பாலிகை என்பது அவர்கள் பெயர். அச்சுயம்வரத்திற்கு எல்லா மன்னர்களும் அழைக்கப்பட்டிருந்தார்கள். நானும் என் தேரில் காசிக்குச் சென்று அந்த அழகிய அரசகுமாரிகளைக் கண்டேன். அவர்களை என் தேரில் ஏற்றிக் கொண்டு மற்ற அரசர்களிடம் முடிந்தால் அந்த அரச குமாரிகளை விடுவித்துக் கொண்டு போகும் படிக் கூறினேன். அங்கிருந்த எல்லா மன்னர்களும் ரதங்களிலும் யானைகள் மீதும் குதிரைகள் மீதும்





ஏறி அமர்ந்து என்னைத் தாக்கினார் கள். நான் அவர்களது தாக்குதல் களை எல்லாம் முறியடித்து அவர் களைத் துரத்தினேன். அவர்கள் ஓடியே போய் விட்டார்கள். நான் காசி மன்னனின் மூன்று புதல்விகளையும் சத்தியவதியிடம் கொண்டு போய்க் காட்டினேன். அவர்களை விசித்திர வீரியனுக்கு மணம் செய்து வைக்கக் கொண்டு வந்திருப்பதாகக் கூறினேன். அப்போது அம்பை தான் சால்வ மன்னனை விரும்புவதாயும் அவனும் அவளை மணந்து கொள்ள சம்மதித்திருப்பதாயும் கூறினாள். எனவே தன்னை சால்வ மன்னனி டம் அனுப்பி வைக்கும்படியும் வேண்டினாள். நானும் அமைச்சரு டனும் சத்தியவதியுடனும் கலந்து ஆலோசித்து விட்டு அம்பையைப் பணிப் பெண்களுடன் தக்க பாதுகாப்புடன் சால்வ மன்னனிடம் அனுப்பினேன்.

ஆனால் சால்வன் அவளை ஏற்க மறுத்தான். பீஷ்மர் அபகரித்துச் சென்ற பெண் தனக்குத் தேவை இல்லை என்று அவன் கூறி அனுப்பிவிட்டான். அவள் பல முனிவர்களைக் கண்டு தன் கதையைக் கூறி தான் வாழ்வில் விரக்தி அடைந்து விட்டதாயும் தான் தவம் செய்யும் வழி முறைகளைக் கூறுமாறு வேண்டினாள். அவர்களோ ''உன்னால் தவம் செய்ய இயலாது. நீ உன் தந்தையிடமே போய் விடு'' என்றார்கள். அம்பை அதற்குச் சம்மதிக்கவில்லை.

அப்போது ஹோத்திரவாகனர் என்ற ராஜரிஷி வந்தார். அவர் அம்பையின் தூர உறவினர். அவர் அம்பையின் பரிதாப நிலை கண்டு ''பெண்ணே! உன்னால் தவம் செய்ய இயலாது. நீ ஜமதக்னி முனிவரின் மகனான பரசுராமரிடம் போய் முறையிடு. அவர் உன்னை பீஷ்மரிடமே சேர்ப்பிப்பார். பீஷ்மர் உன்னை ஏற்க மறுத்தால் பரசுராமர் அவரோடு போர் புரிந்து அவரை தோற்கடித்து உன்னை ஏற்றுக் கொள்ளச் செய்வார்'' என்றார்.

பரசுராமர் மறுநாள் அந்த ஆசிரமத்திற்கு வரப் போவதாகத் தகவல் வந்தது. அம்பை அவரது

வருகைக்குக் காத்திருந்தாள். முனிவர்கள் பரசுராமரை வரவேற்றார்கள். அம்பையும் அவர்களோடு சேர்ந்து நின்றாள். பேச்சுவாக்கில் ஹோத்திரவாகனர் அம்பையைப் பற்றி பரசுராமரிடம் கூறி அவளது கஷ்டத்தை எடுத்துரைத்தார்.

பரசுராமரும் அம்பையிடம் ''பெண்ணே! நீ சால்வனுடன் வாழ விரும்புகிறாயா அல்லது பீஷ்மருடனா? இருவரில் யாரை வேண்டுமானாலும் என்னால் வழிக்குக் கொண்டுவர முடியும்'' என்றார். அம்பையும் ''என் கஷ்டங்களுக்கு எல்லாம் காரணம் பீஷ்மர்தான். அவரை நீங்கள் கொன்றால் தான் என் மனம் சாந்தியடையும்'' என்றாள். பரசுராமர் என்னைக் கொல்ல ஒப்புக் கொள்ள வில்லை. ஆனால் நான் அம்பையை ஏற்க மறுநாள் என்னோடு போர் புரிவதாக வாக்களித்தார்.

பரசுராமர் அம்பையையும் சில முனிவர்களையும் கூட்டிக் கொண்டு குருக்ஷேத்திர மைதானத்திற்கு வந்தார். அவர் சரஸ்வதி நதிக்கரையில் தங்கி நான் அவர் கூறுகிறபடி நடக்க வேண்டும் என்ற செய்தியை அனுப்பினார். நான் ஒரு பசுமாட்டையும் சில அந்தணர்களையும் அழைத்துக் கொண்டு வணங்கி தக்க மரியாதைகளையும் செய்தேன்.

அவர் என்னைப் பார்த்து



''பீஷ்மா! நீ இந்தப் பெண்ணைக் கவர்ந்து வந்ததால் இவள் உன்னிடமே இருக்க வேண்டியவள் தானே. இவளை ஏன் சால்வனிடம் அனுப்பினாய்? அவனோ இவளை ஏற்கவில்லை. உன்னால் இவளது வாழ்வே பாழாகிவிட்டது. நீ கொண்டு சென்ற இந்தப் பெண்ணை வேறு யார்தான் மணந்து கொள்வார்கள்? எனவே இவள் உன்னிடம்தான் இருக்க வேண்டும்'' என்றார்.

அப்போது நான் ''இவளை என் தம்பி விசித்திர வீரியனுக்கு மணம் செய்து வைக்கவே கவர்ந்து வந்தேன். ஆனால் இவள் அவனை மணக்கவிரும்பாமல் சால்வனைத் தான் மணம் செய்து கொள்ளப்



போவதாக கூறினாள். அதன் பேரில்தான் நான் இவளை சால்வனிடம் அனுப்பினேன்'' என்றேன்.

அதைக் கேட்டும் பரசுராமர் ''நான் சொல்வதை நீ கேட்கா விட்டால் உன்னையும் உன் மந்திரிகளையும் கொன்று விடுவேன்'' என்று கூறினார். நான் அவரை சமாதானப்படுத்த முயன் றேன். அவர் எனக்கு அஸ்திரங் களைக் கொடுத்த குருநாதர் என்றும் எடுத்துக் கூறிப் பார்த்தேன்.

அவரோ ''நான் உனக்கு குரு. நீ என் சீடன். எனவே குருவாகிய நான் இடும் கட்டளையை சீடனாகிய நீ நிறைவேற்றியே ஆக வேண்டும்'' என்றார். நானோ ஒரு போதும் நியாயமற்ற செயலைச் செய்ய மாட்டேன் என்று கூறினேன். இதனால் வாக்குவாதம் மூண்டு மறுநாள் இருவரும் போரிடுவது என நிச்சயிக்கப்பட்டது. நான் ஹஸ்தினாபுரத்திற்கு வந்து சத்தியவதியிடம் விஷயத்தைக் கூறி அவளது ஆசிகளைப் பெற்று மறுநாள் ரதத்தில் அமர்ந்து குருக்ஷேத்திரத்திற்கு வந்தேன். நான் பரசுராமரை வணங்கி விட்டுப் போர்புரியத் தயாராக நின்றேன்.

நாங்கள் கடும் போர்புரிந்தோம் இந்தப் போர் இருபது நாட்கள் நடந்தது முடிவில் பரசுராமர் தாம் தோற்றுப் போனதாக ஒப்புக் கொண்டார். அதன்பின் அம்பை யிடம் ''பார்த்தாயா! என்னால் பீஷ்மனை வெல்ல முடியவில்லை. இனி என்னால் எதுவும் செய்ய முடியாது'' என்றார். அவளோ என்னைக் கொல்வதற்காகத் தவம் புரியப் போவதாகக் கூறிவிட்டுச் சென்றாள். பரசுராமர் மஹேந்திர மலைக்குப் போய் விட்டார்.

அம்பை யமுனை நதிக் கரையிலுள்ள முனிவர்களின் ஆசிரமத்திற்குச் சென்றாள். அங்கு அவள் கடும் தவம் புரிந்தாள். பனிரெண்டு ஆண்டுகள் அவள் தவம் செய்த பின் சிவபெருமான் அவள் முன் தோன்றினார். அவளுக்கு என்ன வரம் வேண்டு மென்று கேட்க அவள் என்னை வெல்வதற்கான வரத்தைக்

கேட்டாள். சிவனும் அந்த வரத்தைக் கொடுத்து 'நீ அடுத்த பிறப்பில் பெண்ணாகப் பிறந்து பின் ஆணாக மாறி பீஷ்மரைக் கொல்வாய்'' என்று கூறி விட்டு மறைந்தார். அம்பை உடனே தீ வளர்த்து அதில் குதித்து உயிர் நீத்தாள். துருபதமன்னனுக்குக் குழந்தையே பிறக்கவில்லை அவனும் பீஷ்மரிடம் தோற்றவனே. அதனால் அவன் பீஷ்மரைக் கொல்ல தனக்கு ஒரு மகன் பிறக்க வேண்டுமென்ற வரத்தை சிவனிட மிருந்து பெறத் தவம் செய்தான். அவரும் பீஷ்மரைக் கொல்ல ஆண் பெண்ணாக ஒரு குழந்தை அவனுக் குப் பிறக்கும் என்ற வரத்தைக் கொடுத்து விட்டு மறைந்தார்.



இதன் பின் துருபதனின் மனைவி கர்ப்பமுற்று ஒரு பெண் குழந்தை யைப் பெற்றெடுத்தாள். ஆனால் துருபதன் தனக்கு ஆண் குழந்தை பிறந்திருப்பதாக எல்லோரிடமும் சொல்லி வந்தான். தனக்குப் பிறந்த பெண் குழந்தையை ஒரு ஆண் குழந்தையை வளர்ப்பது போல வளர்த்து வந்தான். இதற்கு அவன் மனைவியும் துணை புரிந்தாள். அந்தப் பெண் சிவனாரின் வரப்படி என்றாவது ஆணாக மாறிவிடுவாள் என்றே துருபதன் தைரியத்துடன் இருந்தான். அதற்கு சிகண்டி என்றும் பெயர் வைத்தான்.

சிகண்டி ஆண் வேடம் பூண்டு எல்லாக் கலைகளையும் கற்றாள். துரோணரிடம் வில் பயிற்சி பெற்றாள். துருபதன் தசார்ணவ மன்னனின் மகளை பெண்ணாக உள்ள சிகண்டிக்கு மணம் செய்து வைக்க நிச்சயித்தான். இச் செய்தி பல மன்னர்களுக்கு அறிவிக்கப் பட்டது. தசார்ணவ மன்னனின் மகளின் பெயரும் சிகண்டியே. இரு சிகண்டிகளுக்கும் விவாகம் நடைபெற்றது.

ஆனால் தசார்ணவ மன்னனின் மகள் சிகண்டி தன் கணவன் ஆணல்ல என்பதைக் கண்டு பிடித்து விட்டாள். அதை அவள் தன் தந்தை அறியும்படிச் செய்தாள். துருபதன் செய்த துரோகத்தால் கோபம் அடைந்த தசார்ணவ மன்னன் தன் தூதனை அனுப்பி தான் படையோடு



வந்து அவனையும் அவனது குடும்பத்தினரையும் அழிக்கப் போவதாக எச்சரித்தான்.

துருபதன் பயந்து போய் இப்போது என்ன செய்வது என்று தன் மனைவியிடம் யோசனை கேட்டான். அவளும் என்ன செய்வது என்று தெரியாமல் விழித்தாள். தன் பெற்றோர்களின் நிலை கண்டு சிகண்டி தன் உயிரை மாய்த்து கொள்வது எனத் தீர்மானித்து அடர்ந்த காட்டிற்குள் சென்றாள். அந்தக் காடு ஸ்தானாகர்ணன் என்ற யட்சனின் ஆதிக்கத்தில் இருந்தது. அங்கு சிகண்டி சில நாட்கள் உணவின்றி உட்கார்ந்திருக்கவே அந்த யட்சன் அவளை கண்டு ''நீயார்? உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டான். சிகண்டி ''உன்னால் எனக்கு உதவ முடியாது'' என்று கூறித் தன் வரலாற்றைக் கூறினாள்.

அந்த யட்சனும் ''கவலைப் படாதே; கொஞ்ச காலத்திற்கு என் ஆண் உருவை உனக்குக் கொடுத்து உன் பெண் உருவை நான் வாங்கிக் கொள்கிறேன். உன் தந்தைக்கு ஏற்பட்டுள்ள ஆபத்து விலகியதும் நீ வந்து என் உருவை எனக்குக் கொடுத்து விட்டு உன் உருவை என்னிடமிருந்து வாங்கிச் செல்'' என்றான்.

சிகண்டி மகிழ்ச்சியுடன் இந்த ஏற்பாட்டை ஏற்றுக் கொண்டாள். பெண்ணாகச் சென்ற சிகண்டி ஆணாகித் திரும்பி வந்தது கண்டு துருபதனும் அவன் மனைவியும் மகிழ்ச்சி அடைந்தனர். துருபதனும் ''என் மகன் சிகண்டி ஆணே. சந்தேகம் இருந்தால் பரீட்சித்துப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று தசார்ணவ மன்னனுக்குச் செய்தி அனுப்பினான். அது உண்மையா எனக் கண்டறிய தசார்ணவ மன்னன் சில பெண்களை அனுப்பினான். அவர்கள் சிகண்டியைப் பல விதமாய்ப் பரீட்சித்து அவன் ஆணே எனக் கண்டு அச் செய்தியை. தசார்ணவ மன்னனிடம் கூறினார்கள்.

தசார்ணவ மன்னன் தானே சென்று துருபதனையும் சிகண்டி

யையும் கண்டு அவர்களுக்கு நல் வாழ்த்துக்களைக் கூறினான். தன் மகளை அவன் கடிந்து கொண்டு தன் நாட்டிற்குத் திரும்பிச் சென்றான்.

இச்சமயத்தில் குபேரன் விமானத்தில் உலாவி வருகையில் ஸ்தானாகர்ணனின் வனத்தில் இறங்கினான். அப்போது அந்த யட்சன் தன்னைக் காண வராதது கண்டு அவன் ஆச்சரியம் அடைந்தான். யட்சனை அழைத்துவரும்படி குபேரன் தன் ஆட்களை அனுப்பவே அவர்கள் பெண்ணாக மாறி இருந்த ஸ்தானாகர்ணனை அழைத்து வந்து குபேரனின் முன் நிறுத்தினார்கள். யட்சன் பெண்ணான காரணத்தைக் கேட்டு அறிந்து கொண்ட குபேரன் கோபம் கொண்டு ''நீ என்றும் பெண்ணாகவே இருக்கக் கடவாய்'' என்று சபித்து விட்டான். அப்போது எல்லோரும் யட்சனுக்கு சாபவிமோசனம் எப்போது என்று கேட்கவே, குபேரனும் ''சிகண்டி இறந்ததும் இந்த யட்சன் ஆணாகி விடுவான்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

கொஞ்ச நாட்களான பின் சிகண்டி யட்சனிடம் வந்து ''ஐயா! எங்களுக்கு வந்த ஆபத்து போய் விட்டது. இனி உங்கள் ஆணுருவத்தை என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு என் பெண்ணுருவை எனக்குக் கொடுங்கள்'' என்று கூறினான். யட்சன் குபேரன் தனக்குக் கொடுத்த சாபத்தைக் கூறி ''நீ இனி ஆணாகவே இரு'' எனக் கூறி அவனை அனுப்பிவிட்டான்.

பீஷ்மர் இக் கதையைக் கூறி ''பெண்ணாகப் பிறந்து சிகண்டி இப்போது ஆணாக இருக்கிறான். பெண்ணாகப் பிறந்தவனை நான் கொல்ல மாட்டேன். அதனால்தான் சிகண்டியை நான் கொல்ல முடியாது என்று கூறினேன்'' என்றார்.





# தோற்றது யார்?

காளியூர் ஏரிக்கரையோரம் ஒரு நாள் மாலை நான்கு நண்பர்கள் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். பேச்சு வாக்கில் பாலன் என்பவன் ''உலகில் மனிதனால் முடியாதது என்று எதுவும் இல்லை. விடா முயற்சியினால் எதனையும் சாதித்து விடலாம்'' என்றான். அது கேட்டு கோபு ''எதையும் சாதித்து விட முடியுமா?'' என்று கேட்டான். பாலன் சிரித்தவாறே ''இது செப்பிடு வித்தை அல்ல. மனிதனால் செய்து விடக் கூடிய வேலையைத்தான் விடாமுயற்சியால் செய்து விட முடியும் என்றேன்'' எனக் கூறினான்.

இதன் பேரில் பாலனோடு மற்ற நண்பர்கள் விவாதத்தில் இறங்கினார்கள். பேச்சுவளர்ந்து கொண்டே போய் பந்தயம் வைப்பதில் முடிந்தது. முடிவில் கோபு ''பாலா! நான் ஒரு வேலையைச் சொல்கிறேன். அதைச் செய்து முடிப்பாயா?'' என்று கேட்டான். பாலனும் ''அது என்ன வேலை என்று கேட்கவே கோபுவும் ''உன் தந்தை சுருட்டு குடிப்பதை நீ நிறுத்திக் காட்ட வேண்டும் இதைச் செய்தால் உனக்கு நூறு ரூபாய் கொடுக்கிறேன்'' என்றான்.

பாலனின் தந்தை பழனிசாமி கெட்டிக்காரர். நல்ல பேச்சுத்திறன் கொண்டவர். மிகவும் நல்லவர். ஆனால் அவரிடமுள்ள ஒரே கெட்ட செயல் சுருட்டு பிடிப்பதுதான். யாருடனாவது பேச ஆரம்பித்தால் சுருட்டுகளைத் தொடர்ந்து குடித்துப் புகை விட்டுக் கொண்டே இருப்பார்.

பாலன் கொஞ்ச நேரம் எதுவும் கூறாமல் இருந்தான். பிறகு கோபுவிடம் '' நீ சொன்னபடி என் தந்தை சுருட்டு குடிப்பதை நிறுத்திக் காட்டுகிறேன்'' என்று கூறினான்.

மறுநாள் பாலன் தந்தையிடம்

கி.அருணா

ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும் எனக் கூறி அவரை நாற்காலியில் உட்கார வைத்தான். அவரிடம் புகையிலையால் ஏற்படக் கூடிய கஷ்ட நஷ்டங்களை விவரமாக எடுத்துக் கூறினான். ஒரு சுருட்டு குடித்தால் மனிதனின் ஆயுளின் ஒரு நாள் குறைகிறது என்று விள்க்கினான். சுருட்டு குடித்துக் கொண்டே இருந்தால் உடல் நலம் குன்றி ஆயுள் குறைந்து விடும் என்று உரைத்தான்.

பழனிசாமி தன் மகன் கூறியதை கவனமாகக் கேட்டார். பிறகு அவர் "இதோபார்! இறப்பும் பிறப்பும் நம் கையில் இல்லை. என்று இறக்க வேண்டுமென்று இருக்கிறதோ அன்று இறந்துதான் போவோம் சுருட்டுக் குடிக்காதவர்கள் இளம் வயதிலேயே இறப்பது இல்லையா? சுருட்டுக் குடிப்பது கெட்ட பழக்கமே. ஆனால் அது ஒன்றுதான் எனக்கு சுகத்தைக் கொடுக்கிறது. அந்த சுகத்தை விட்டு விட்டு வாழ்வதில் என்ன பயன் உள்ளது? என்னை என் போக்கில் போக விட்டு விடு" என்றார்.

பாலன் திகைத்துப் போனாலும் தன் முயற்சியைக் கைவிடவில்லை. அவன் தன் தந்தையிடம் "யாராவது உங்களிடம் நீங்கள் சுருட்டு குடிப்பதை விட்டு விட்டால் லட்சம் ரூபாய் கொடுப்பதாகக் கூறினால் அப்போது அதை விட்டு விடுவீர்களா? என்று கேட்டான்.



அவரும் "ஓ! விட்டு விடுவேன்" எனவே பாலனும் "ஓஹோ! நீங்கள் அது வேண்டாம் என்று தீர்மானித்தால் அதை விட்டு விடுவீர்களாக்கும். அப்படித் தானே?" என்று கேட்டான்.

பழனிசாமி சிரித்தவாறே "நான் சுருட்டு குடிப்பதை விட்டு விட்டால் எனக்கு லட்ச ரூபாய் கொடுக்கப் போகும் பைத்தியக் காரன் யாரப்பா?" என்று கேட்டார். பாலனும் "சரி, யாராவது ஒருவன் கத்தியை காட்டி சுருட்டு குடிப்பதை விடாவிட்டால் உங்களைக் கொன்று விடுவதாக மிரட்டினால் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டான். விட்டு விடுவதாகக் கூறுவேன் என்றார். அவர். பிறகு

''அவன் என்னை விட்டுப் போனதும் சுருட்டை எடுத்துக் குடிக்க ஆரம்பித்து விடுவேன்'' என்று கூறி அப்போதே ஒரு சுருட்டை எடுத்துப் பற்ற வைத்தார்.

பாலனுக்குக் கோபம் வந்தது. அவன் ''என்னப்பா! நான் படித்துப் படித்துச் சொன்னாலும் நீங்கள் கேட்காமல் அலட்சியப்படுத்து கிறீர்களே. நீங்கள் சுருட்டு குடிப்பதை நிறுத்தாவிட்டால் நான் சாப்பிடவே மாட்டேன்'' என்றான். அன்று அவன் சாப்பிடாமல் இருக்கவே அவனது தாயார் மிகவும் வேண்டியும் உணவு உண்ண வில்லை. இதை அவள் தன் கணவனிடம் தெரிவிக்கவே அவரும் ''எல்லாம் வயிறு வாடி னால் தானாக வந்து சாப்பிடுவான் பார்'' என்று கூறி சமாதானப் படுத்தினார்.

பழனிசாமி ஏதோ வேலையாக அடுத்த ஊருக்குப் போய் விட்டு இரண்டு நாட்கள் கழித்துத் திரும்பி வந்தார். பாலன் அந்த இரண்டு நாட்களிலும் சாப்பிடவில்லை. கண் ஒடுங்கிப்போய் முகம் வாடி சோர்வுற்றுப் போயிருந்தான். விஷயம் தெரிந்து அக்கம் பக்கத்தவர் வந்து பழனிசாமியைத் தான் கடிந்து கொண்டார்கள். அப்போதுதான் அவரது மனம் இளகியது.

அவர் தன்னிடமிருந்த சுருட்டு களை எல்லாம் எடுத்துபாலனின் கண் முன்னாலேயே தூக்கித் தெருவில் எறிந்து விட்டு பாலனருகே வந்து ''பாலா! வெற்றி உனக்குத்தான். உன் உண்ணாவிரதத் தைக் கைவிட்டு எழுந்து போய் சாப்பிடு'' என்றார்.

பாலன் தன் தந்தையைப் பார்த்து ''வெற்றி எனதல்ல. இவ்வளவு காலமாகத் தன் அடிமையாக ஆக்கிக் கொண்டிருந்த சுருட்டின் மீது தான் நீங்கள் வெற்றி கொண்டீர்கள்.'' என்று கூறி ஆனந்தக்கண்ணீர் வடித்தான்.





# கடவுளே, காத்திரு!

வெண்ணாற்றுக் கரையிலிருந்த ஒரு கிராமத்தில் வெங்கய்யர் என்ற ஏழைப் பிராம்மணர் இருந்தார். அவரது ஒரே மகன் தியாகு. அவன் செல்லமாக வளர்க்கப்பட்டு வந்தான். சிறுவயதிலிருந்தே அவனது புத்தி மந்தமாக இருந்தது. உட்கார்ந்தால் உட்கார்ந்தபடியே இருப்பான். யாராவது எழுந்திரு என்று சொன்னாலே எழுந்திருப் பான். வந்து சாப்பிடு என்றாலே சாப்பிடப் போவான். யாரும் கூப்பிடா விட்டால் அவன் சாப்பிடாமலேயே இருந்து விடு வான். இது போல படுத்துத் தூங்கு என்றாலே படுத்துத் தூங்குவான்.

நல்ல கல்வி அளித்தால் அவன் திருந்தி விடுவானென எண்ணி தியாகுவை அவனது தந்தை ஒரு குருகுலத்திற்கு அனுப்பினார். ஆறு வருடங்கள் குருகுலவாசம் செய்து கூட அவன் திருந்தவில்லை. ஆனால் குருநாதர் என்ன சொன்னாலும் அதை அவன் செய்து வந்தான். அவனது புத்திதான் மந்தம். ஆனால் அவன் சோம்பேறி அல்ல. எந்த வேலையைச் செய்யச் சொன்னாலும் செய்து முடிப்பான். இதனால் குரு அவனை மிகவும் விரும்பினார்.

தியாகுவுக்குப் பனிரெண்டு வயதாகியது. அப்போது அவனது குரு ''இனி நீ வீட்டிற்குப் போக லாம். இங்கு எப்படி வேலை செய்து வந்தாயோ அது போல எங்கும் செய்'' என்று கூறி அனுப்பினார். சில ஆண்டுகள் குருகுல வாசம் செய்தும் தியாகு மாறாதது கண்டு அவனது தந்தை அவனிடம் வீட்டு வேலைகளை எல்லாம் செய்யச் சொல்ல அவனும் அவ் வேலை களைச் செவ்வனே செய்து வந்தான்.

தியாகுவின் தாயாரின் கண் பார்வை போய் விட்டது. அதனால்

எஸ்.சோபினி



அவனது தந்தையே சமையல் செய்து வந்தார். கூடமாட சிறு வேலை களைச் செய்யும்படி அவர் தியாகு விடம் கூற அவனும் அவற்றைச் செய்து வந்தான். இது கண்டு தந்தை இவனைத்திருத்த இவனுக்குத் திருமணம் செய்து வைத்தால் இவனது மனைவி இவனைத் திருத்துவாள்''என எண்ணினார். மருமகள் வந்து விட்டால் வீட்டு வேலைகளை அவள் கவனித்துக் கொள்வாள் என எண்ணி ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து தியாகு வுக்கு மணம் செய்து வைத்தார்.

தியாகுவின் மனைவி மீனா வந்த பின் தியாகுவிற்கு எந்த வேலையும் இல்லாமல் போயிற்று. அப்போது வெங்கய்யர் மீனாவிடம் ''நீ உன் கணவனிடம் வேலைகளைச் சொன் னால் அவன் செய்து விடுவான்'' என்றார். ஆனால் அவளோ தன் கணவனை வேலை செய்ய விடவில் லை. தன் மகன் ஒரு வேலையும் செய்யாமல் உட்கார்ந்திருப்பதைக் கண்ட வெங்கய்யர் தியாகுவிடம் ''உன் மனைவிக்கு வேலையில் ஏதாவது உதவி வேண்டி இருக்கும். போய்ப் பார்'' என்று கூறி அனுப்பினார்.

தியாகு மீனாவிடம் ''ஏதாவது வேலை இருக்கிறதா?'' என்று கேட்க அவள் ''அத்தையிடம் கேளுங்கள்'' என்றாள். அவன் தன் தாயாரிடம் போய்க் கேட்கவே அவள் ''உன் தந்தையைக் கேள்'' என்று சொல்லி அனுப்பினாள். அவன் தன் தந்தையிடம் போகவே அவர் தலையில் அடித்துக் கொண்டு ''எங்காவது போய் உட்கார்ந்து பகவானை நோக்கித் தவம் செய் போ'' என்று சலிப்புடன் கூறினார்.

அதன்படி தியாகு காட்டிற்குப் போய் தவம் செய்யவே, கொஞ்ச காலமானதும் பகவான் அவன் முன் தோன்றி ''உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார். தியாகுவும் ''நீங்கள் இங்கேயே இருங்கள். நான் என் வீட்டிற்குப் போய் என்ன வரம் கேட்க வேண்டு மென்று கேட்டு வருகிறேன்'' என்று கூறி எழுந்து தன் வீட்டிற்குச் சென்றான். அங்கு அவ்ன தன் தந்தையிடம் ''நீங்கள் கூறியபடி தவம் செய்தேன். பகவான் வந்து

என்ன வரம் வேண்டும் என்று கேட்டார். உங்களிடம் கேட்டுக் கொண்டு வருவதாகச் சொல்லி அவரை இருக்கும்படிச் சொல்லி விட்டு வந்தேன்'' என்றான்.

அவர் ''நிறையப் பணம் வேண்டும் என்று கேள்'' என்றார். தியாகுவின் தாயாரோ ''எனக்குப் பார்வை வர வேண்டும் என்று கேள்'' என்றாள். அவனது மனைவி மீனா ''நமக்குக் குழந்தைகள் வேண்டுமென்று வேண்டுமென்று கேளுங்கள்'' என்றாள். எல்லோர் சொன்னதையும் கேட்பதாகக் கூறி விட்டு தியாகு தான் தவம் செய்து கொண்டிருந்த இடத்திற்குச் சென்றான்.

ஆனால் பகவான் அவனுக்காக காத்து நிற்கவில்லை. அவன் காடு முழுவதும் அலைந்து தேடினான். எங்கும் தென்படாததால் ஒரு முனிவரைக் கண்டு ''இங்கே சற்று முன் வந்த பகவானைப் பார்த்தீர்களா? இங்கேயே கொஞ்ச நேரம் நில்லுங்கள் என்று சொல்லி விட்டுப் போனேன். வந்து பார்த்தால் அவரைக் காணோம்'' என்றான்.

அதுகேட்டு ஆச்சரியப்பட்டு முனிவர் தியாகுவிடம் விசாரித்து விஷயத்தைத் தெரிந்து கொண்டார். அவர் ''என்னடா இது! பகவானைக் காக்க வைத்துப் பெரிய பாவத்தைச் செய்து விட்டாயே. இதற்காக எங்காவது போய் உயிரை விடுவது தானே'' என்றார். தியாகுவும் முனிவரின் சொற்படி உயிரைவிட அவன் ஒரு மலை மீது ஏறியபோது ஒரு வேடன் அவனிடம் ''மலை மேல் ஒன்றும் இல்லை. ஏன் ஏறுகிறாய்?'' என்று கேட்டான். தியாகுவோ 'உயிரை விடத்தான்' என்வே அவன் விஷயத்தை அறிந்து கொண்டு ''பகவான் உன்னை வரம் கேட்கச் சொன்னார். அதை தன்னிடம் சொல்லும்படியா சொன்னார். நீ வரத்தைக் கேட்டுவிட்டு உன் வீட்டிற்குப் போ. எல்லாம் நீ கேட்டபடி நடக்கும்'' என்றார்.

தியாகுவும் தன் தந்தையும் தாயும் மனைவியும் கேட்கச் சொன்னதை உரக்கக் கத்தி சொல்லி விட்டுத் தன் வீட்டிற்குச் சென்றான். வீட்டில் பணமாகக் கொட்டி வழிந்தது. தாயாருக்குக் கண் பார்வை கிடைத்து விட்டது. அடுத்த ஆண்டில் மீனா ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.





# பிரச்சினை தீராதே!

கஞ்சனான ஒரு வியாபாரி ஒரு முறை ஏதோ வேலையாக தூரத்தி லுள்ள பட்டணத்திற்குப் போய்க் கொண்டிருந்தான். தன்னுடன் வேலையாளான யூசப்பையும் அழைத்துக் கொண்டு சென்றான். கொஞ்ச தூரம் போனதுமே யூசுப் ''ஐயா! வெகு தூரம் பயணம் செய்ய வேண்டுமே. களைத்துப் போக மாட்டோமா?'' என்று கேட்டான். வியாபாரியும் ''அதொன்றும் பெரிய விஷயம் இல்லை. உன் சிரமத்தில் பாதியை நான் பகிர்ந்து கொள்கிறேன்'' என்றான்.

சிறு வண்டியில் சரக்குகளை ஏற்றி வண்டியில் குதிரையைப் பூட்டி அதன் மீது வியாபாரி உட்கார்ந்து கொண்டு செல்ல யூசுப் குதிரைக்கு முன் ஓடலானான். அன்று முழுவதும் யூசுப் ஓடினான். குதிரை மீது உட்கார வியாபாரி அவனுக்கு வாய்ப்பை அளிக்க வில்லை. மாலையாகி இருள் வந்த போது வியாபாரி வண்டியை நிறுத்தி கூடாரம் போட்டு அதில் சாமான் களை வைத்தான். அவன் கூடாரத் தினுள் போய் உணவு சாப்பிட்டு விட்டு வந்து ''யூசுப்! நீ குதிரைக்கு காவலாக இரு. நான் சாமான்களுக் குக் காவலாக கூடாரத்தில் இருக் கிறேன். இப்படி காவல் காக்கும் வேலையைப் பகிர்ந்து கொள் வோம்'' எனக் கூறி கூடாரத்துள் போய்ப் படுத்து விட்டான்.

யூசுப் கூடாரத்தின் வெளியே குதிரைக்குக் காவலாக உட்கார்ந்தி ருந்தான். பகலெல்லாம் ஓடிக் களைத்துப் போனதால் அவ்வப் போது தூங்கி வழிந்தான். சில சமயங்களில் கண் விழித்துக் கொண்டு குதிரையைப் பார்த்துக் கொண்டான்.

பாதி ராத்திரி வியாபாரி கண் விழித்து ''யூசுப், என்ன செய்கிறாய்?'' என்று கேட்டான். யூசுபும் ''ரோஜாப்பூ பறிக்கும் போது கையில் முள் படாமல் எப்படிப் பறிப்பது என்று யோசனை செய்து கொண்டிருக்கிறேன்'' என்றான். வியாபாரியும் ''சரி; அது பற்றி

கி.பாலாஜி

நன்றாகவே யோசனை செய்'' என்று கூறி விட்டுப் படுத்தான். மேலும் மூன்று மணி நேரம் கழிந்தது. வியாபாரி கண் விழந்து ''யூசுப்! என்ன செய்கிறாய்?'' என்று கேட்டான். அவனும் ''ஒருக்கால் நாளை சூரியன் உதிக்காவிட்டால் என்ன செய்வது என்று யோசிக்கிறேன்'' என்றான்.

வியாபாரியும் ''பேஷ் பேஷ் அது பற்றியே ஆழ்ந்து யோசி''என்று கூறிவிட்டுப் படுத்தான். ஒரு மணிநேரம் கழிந்தது. அப்போது வியாபாரி கண் விழித்து ''யூசுப் என்ன செய்கிறாய். இப்போது?'' என்று கேட்டான். யூசுப்பும் ''ஆழ்ந்து யோசனை செய்து கொண்டிருக்கிறேன்'' என்றான். அது கேட்டு வியாபாரி திருப்தி அடைந்தவனாய் ''ஆமாம். எது பற்றி நீ யோசித்துக் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான். யூசுப்பும் ''நானும் யோசித்து யோசித்துத் தான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அதற்குச் சரியான விடை தான் தெரியவில்லை. நேற்று நீங்கள் குதிரை மீது உட்கார்ந்து வந்தீர்கள். நான் நடந்து வந்தேன். சிரமத்தை நாம் பகிர்ந்து கொள்வோம் என ஒப்புக் கொண்டதால் இன்று நான் குதிரை மீது உட்கார்ந்து செல்ல வேண்டும். நீங்கள் நடக்க வேண்டும். இது எவ்வாறு நடக்கப் போகிறது என்று தான் கவலைப் பட்டுக் கொண்டு இருக்கிறேன்'' என்றான்.

வியாபாரியும் ''இதில் கவலைப் பட என்ன இருக்கிறது? நீ குதிரை மீது உட்கார்ந்து போவாய். நான் அதன் முன் நடப்பேன். அவ்வளவு தான்'' என்றான். யூசுப்பும் ''நீங்கள் கூறுவது போல அவ்வளவு எளிதான தாகப் பிரச்சினை இல்லை. ஏனென்றால் குதிரையை யாரோ திருடிக் கொண்டு போய் விட்டார்கள். அதனால் நான் குதிரை மீது உட்கார்ந்து செல்ல முடியாது. உங்களோடு சேர்ந்து இருவரும் சாமான்களுள்ள வண்டியை இழுத்துக் கொண்டு போக வேண்டியது தான்'' என்றான்.

அது கேட்டு வியாபாரி கூடாரத்திலிருந்து வெளியே ஓடி வந்து சுற்றிலும் பார்த்தான். எங்கும் குதிரை தென்படவில்லை ''ஐயோ! என் குதிரை போய்விட்டதே'' என்று கூவித் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்!






# உங்களுக்குத் தெரியுமா? சொல்லுங்கள் பார்க்கலாம்

இங்கு பிரசுரிக்கப்பட்ட வினாக்களுக்கு அடுத்து வரும் இதழில் விடைகள் பிரசுரிக்கப்படும். அதற்குள் நீங்கள் யோசித்து வைத்துக் கொள்ளுங்கள்.

## 1



ஒவ்வொரு நாளும் எவ்வளவோ மனிதர்கள் எம லோகத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறார்கள். அதைப் பார்க்கும் போதும் உயிருடன் இருப்பவர்கள் தங்களுக்கு மரணமே இல்லாதது போல இருக்கிறார்கள். இதை விடப் பெரிய வேடிக்கை என்ன உள்ளது?

இப்படிக் கூறியவர் யார்?
எப்போது எதற்குக் கூறினார்?

## 2

கீழ்க் காணும் புராண பாத்திரர்களுக்கும் இடங்களுக்கும் உள்ள தொடர்பு என்ன என்று தெரியுமா

அ. சகுனி – காந்தாரம்
ஆ. கேசரி – மஹாமேரு
இ. சகாதேவன் – மாகிஷ்மதி
ஈ. பரதன் – கேகயம்
உ. வால்மீகி – தமஸாநதி





விஞ்ஞானமும் விநோதமும் மிளிர
இந்திய மொழிகளில் அம்புலிமாமாவே
தனிச்சிறப்பானது

# விலை குறைவானதன் காரணம்

சூலூர் சந்தையில் சுப்பைய்யன் ஒரு மாட்டை வைத்துக் கொண்டு ''நல்லமாடு! நிறைய பால் கறக்கும். விலை மலிவு'' என்று கத்திக் கொண்டிருந்தான். அதைக் கேட்டுக் கொண்டே வந்து கொண்டிருந்த காளியப்பன்'' என்ன விலைக்குக் கொடுப்பாய்?'' என்று கேட்டான். சுப்பையன் நூறு ரூபாய் எனவே அதை வாங்கும் உத்தேசமே இல்லாத காளியண்ணன் ஏதோ கேட்க வேண்டுமே என்பதற்காக இருபத்தைந்து ரூபாய்க்குத் தருகிறாயா என்று கேட்டான். அந்த விலைக்கு சுப்பைய்யன் தரமாட்ட ான் என்றே காளியண்ணன் எதிர்பார்த்தான்.

ஆனால் சுப்பைய்யன் அந்த விலைக்கே கொடுப்பதாகக் கூறி பணத்தை வாங்கிக் கொண்டு மாட்டைக் காளியண்ணனிடம் ஒப்படைத்தான். அப்போது காளியண்ணன் ''இந்த மாடு முன்னூறு ரூபாய் பெறுமே. இதை ஏன் இவ்வளவு மலிவான விலைக்கு விற்கிறாய்? ஏதாவது பணமுடையா?'' என்று கேட்டான்.

சுப்பைய்யனும் ''எனக்குச் சொந்தமில்லாத மாட்டை எந்த விலைக்கு விற்றாலும் எனக்கு லாபம் தானே'' என்று கூறிக் கொண்டே ஓடிக் கூட்டத்தில் மறைந்தான். காளியண்ணனும் மாட்டோடு நின்றால் தனக்கு ஆபத்து என எண்ணி அதை விட்டு விட்டு வேறு பக்கமாக ஓடி கூட்டத்தில் மறைந்தான்!





# பாரதநாடு

## அன்றும் இன்றும்



### துவாரகை
### பழங்கால அமைதி

புராணங்களோடு தொடர்புடைய நம் நாட்டு நகரங்களில் துவாரகையும் ஒன்று. இது குஜராத் மாநிலத்தில் உள்ளது. இந்நகரை கிருஷ்ண பரமாத்மாவே நிர்மாணித்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. இதற்கு துவாரகாவதி, குசஸ்தலி என்ற பெயர்களும் உண்டு. சமுத்திரராஜன் விலகி அந்த நகர நிர்மாண இடம் கிருஷ்ணருக்கு கொடுத்தானாம். கிருஷ்ணரின் நிரந்திர மறைவுக்குப் பின் அந்த நிலத்தை மீண்டும் எடுத்துக் கொண்டு விட்டானாம். கிருஷ்ணரின் கோட்டை இருந்த இடம் மட்டும் மிகுந்ததாம். அது பேட்துவாரகை என அழைக்கப் படுகிறது. இந்தப்பகுதியில் நடந்த ஆய்வில் அங்கு மிகப்பழைய நகரப் பல நூற்றாண்டுகளுக்கு முன் இருந்ததாகத் தெரிய வந்துள்ளது.

இப்போதுள்ள துவாரகை இதற்கு முன் அங்கிருந்து பாழ்பட்ட ஐந்து நகரங்களின் மீது கட்டப்பட்ட தாகும். இதன் முதல் நகரம் கிருஷ்ணரது காலத்திற்கும் முந்தைய தாம். இந்தியாவின் புனிதத் தலங்களின் இதுவும் ஒன்று.

ஆதிசங்கரர் நான்கு மடங்களைத் தான் நிறுவினார். பத்திரிகாசிரமம், சிருங்கேரி, ஜகன்நாதபுரி எனப்படும் பூரி, துவாரகை ஆகியவை அந்த நான்கு இடங்கள். துவாரகையில்

துவாரகாதீசர் ஆலயத்தருகே தான் சங்கர மடம் உள்ளது.

துவாரகாதீசர் ஆலயத்தில் கிருஷ்ணவிக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

கோமதி நதிக்கரையிலுள்ள இந்த ஆலயத்தை முதலில் கட்டியவர் கிருஷ்ணரின் கொள்ளுப் பேரர் வஜ்ஜிரநாபர். இப்போது தென்படும் அழகிய கோவிலை ராஜா ஜகத் சிங் ராதோட் கட்டினார். தினமும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் இந்த ஆலயத்திற்கு வருகிறார்கள். ஸ்ரீ கிருஷ்ணரின் அரண்மனை பேட்துவாரகையில் இருந்தபோதிலும் அவர் இந்த ஆலயம் உள்ள இடத்தில் இருந்து தான் ஆட்சி புரிந்தாராம். மேவார் ராணி மீராபாய் கிருஷ்ண பக்தை. அவர் 1546ல் இந்த விக்கிரகத்தில் ஐக்கியமானாராம்.

ஆலயத்திற்குத் தெற்கே கோமதி நதி ஓடுகிறது. கங்கையிலிருந்து அந்தர்வாகினி வந்து இதில் கலப்பதாக ஒரு ஐதீகம் உள்ளது. இந்த ஆலயத்திலிருந்து 2கி.மீ தூரத்தில் கிருஷ்ணரின் மனைவி ருக்மிணி தேவியின் ஆலயம் உள்ளது. இங்கே அருகேயுள்ள நாகேஸ்வர மஹாதேவ ஆலயத் தருகே ஒரு குளம் உள்ளது. பிருந்தாவன கோபிகா ஸ்திரீகள் கிருஷ்ணரைக்காண துவாரகை வந்த போது இங்கு தான் தங்கினார்களாம்.

துவாரகை கிருஷ்ண பரமாத்மா விலிருந்து ஆரம்பித்து ஆதி சங்கரர் மீராபாய் என்பவர்கள் வரலாறுக ளோடு இணைந்துள்ளது. இந்நகரின் வெளியே பல தொழில்கள் செய் யப்பட்டாலும் நகர் இன்னமும் அதிக சந்தடி இல்லாமல் அமைதி யாக உள்ளது. தற்கால வாழ்க்கை யின் எல்லா வசதிகளும் இங்கே உள்ளன. ஆயினும் பழங்காலப் பெருமையை இங்கு காணவும் உணரவும் முடிகிறது.



# பாடம் கற்பித்த ஒரு அவப்பெயர்!

## செய்தியும் தகவலும்

பழங்காலத்தில் ஏதன்ஸ்நகரில் ஒலிம்பிக் விளையாட்டுகள் ஆர்வத்துடன் விளையாடப்பட்டன. நீண்டகால இடைவெளிக்குப் பின் அவை 1896 ஏப்ரல் 6ந்தேதி மீண்டும் ஆரம்பிக்கபட்டன.

முந்தைய ஒலிம்பிக் விளையாட்டுகளில் வெற்றி பெற்றவருக்கு ஆலிவ் மரக்கிளையைத் தான் பரிசாகக் கொடுத்து கௌரவித்தார்கள். இது அவரது திறமை, தகுதி பலம் ஆகியவற்றை பாராட்டிக் கொடுக்கப் பட்டது. அவர்கள் நேர்மையாவர்கள், நாணயஸ்தர்கள் என்று யாவராலும் மதிக்கப்பட்டனர். ஆனால் மீண்டும் ஒலிம்பிக் விளையாட்டுகள் ஆரம்பமான போது பழங்காலத்தில் இருந்த உணர்வு இருக்கவில்லை. நாளாக ஆக இது வருமானத்தைக் கொடுக்கும் தொழில் போலாகி விட்டது. நாட்டைப் பெருமைப் படுத்த விளையாடுகிறோம் என்பதை விளையாட்டு வீரர்கள் மறந்து பணத்திற்கும் தற்பெருமை கொள்ளவும் விளையாட லானார்கள்.

குறிக்கோளை மறந்து ஒரு வேலையின் உயர் நோக்கத்தை உதறித் தள்ளிவிட்டால் அதன் பிறகு விளைவது லஞ்சஊழலே. விளையாட்டுத்துறைக்கும் இது பொருந்தும். போதைப் பொருள்களை விளையாடுவோர் வெற்றி பெறுவதற்காகவே உட்கொள்கிறார்கள். இந்திய கிரிக்கெட் கோஷ்டியிடம் வேண்டுமேன்றே தோற்றுப் போக தென்னாப்பிரிக்க கிரிக்கெட் கோஷ்டித் தலைவர் லஞ்சம் பெற்றார் என்றும் இது விளையாட்டு வீரர்கள் மீது பந்தயம் கட்டியவர்கள் செய்த வேலைத்தனம் என்றும் தெரிய வந்துள்ளது.

இது பற்றிய விசாரணை நாம் இக்கட்டுரையை எழுதும் சமயத்தில் நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் ஒன்று இத் துறையில் நடந்துள்ள இது தலை குனிந்து வெட்கப்படவே வேண்டிய விஷயமாகும். இப்போது நடந்துள்ள நிகழ்ச்சியிலிருந்து நாம் பாடம் கற்கா விட்டால் எதிர்காலத்தில் வெட்கப் படத்தக்க இத்தகைய பல நிகழ்ச்சிகளைநாம் சந்திக்க வேண்டி வரும். விளையாட்டுகள், போட்டிகள் என்பன வேண்டியவையே அதற்காக அவற்றில் ஒரே யடியாக வெறி கொண்டு செயல்படக் கூடாது. அதற்கு எவ்வளவு மதிப்பு



கொடுக்க வேண்டுமோ அவ்வளவு தான் கொடுக்க வேண்டும். அதில் தான் நம் விதியே நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது என்று முரட்டு எண்ணம் கொள்ளக் கூடாது.

விளையாட்டுகளைக் கற்பிக்கும் எந்த நாடும் அதில் விளையாட்டு வீரர்கள் அந்தரங்க சுத்தியுடன் செயல்பட வேண்டும் என்று புகட்ட வேண்டும். நம் எண்ணம் சரியானதாக இருந்தால் நம் வாழ்வில் எல்லாமே சரியாக இருக்கும். இனி சட்டம் என்று எடுத்துக் கொண்டால் விளையாட்டுகளின் வெற்றி தோல்விகளின் மீதோ அல்லது விளையாட்டு வீரர்கள் மீதோ பந்தயம் கட்டுவதை சட்டபூர்வமாகத் தடை செய்ய வேண்டும். விளையாட்டுகளை வியாபாரப் பொருள்களாக ஆக்க சற்றும் அனுமதிக்கக் கூடாது. போட்டியில் பொறாமை,
தற்பெருமை,
விதிகளை மீறல்,
முரட்டுத்தனமாக விளையாடி அற்ப மகிழ்ச்சி அடைவது என்பன எல்லாம் இருக்கவே கூடாது.

இம்முறையில் விளையாட்டுகள் விளையாடப்பட்டாலே அவை உண்மையான விளையாட்டுகளாக இருக்கும். விளையாட்டு வீரர்களும் மற்றயாவரும் இதனை கருத்தில் கொள்ள வேண்டும். இவ்வாறு விளையாடா விட்டால் அவை விளையாட்டாக இராமல் வெறும் கேலிக் கூத்தாக தான் இருக்கும்.

# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.



போட்டோ
வாக்கியப்
போட்டி
அம்புலிமாமா
வடபழனி
சென்னை - 600 026.





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி ஜூன் 25-ம் தேதிக்குள் மேலே உள்ள முகவரிக்கு வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் 2000 ஜூன் மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

## வாழ்த்துக்கள்



ஜூன் 2000 போட்டியில்
பரிசு பெற்றவர் :
**வ. மிருணா**
பே.சோ. வரதராஜன்
51, ஸ்ரீராம் நகர், கருமண்டபம்,
திருச்சி - 620 001.

**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ : தவழும் தளிர் தரையினிலே!
இரண்டாவது போட்டோ : ஆடிடும் கொடி ஊஞ்சலிலே!

# ஒரு மான்ஸ்டர் ஃபிங்கர் கிடைத்ததல்லவா




# பெறுங்கள்

# ஒரு பிராங்கின்ஸ்டைன் மாஸ்க் இலவசமாய்

இந்த கோடையில் பல லட்சக்கணக்கான ரஸ்னா பேக்குகளில் உங்களை குஷிப்படுத்துகிற பிரான்கி ஒண்ணு உள்ளே இருக்கு. அதுல சில ஃபன் கிரீச்சர்கள், சில ஃபன் எரேஸர்கள். ஆயிரக்கணக்கான பேக்குகளில்* மான்ஸ்டர் ஃபிங்கர் ஒண்ணும், லெட்டரும் இருக்கு. லெட்டரை எங்களுக்கு திருப்பி அனுப்பி, ஒரு லைஃப் சைஸ் லேடக்ஸ் ஃபிராங்கின்ஸ்டைன் மாஸ்க் வாங்கிக்குங்க, இலவசமா !

* 32 கிளாஸ் ரஸ்னா ஸாஃப்ட் டிரிங்க் கான்சன்ட்ரேட் பேக் மேல மட்டுமே இந்த சலுகை.

இந்த சலுகை இல்லாமலும் பேக்குகள் கிடைக்குது.

For more Pranky fun visit: www.gogokid.com

Mudra:RASNA:28 Tam